# கல்கி

அடுத்த இதழில்
பொங்கிவரும்
பெருநிலவு
ஆரம்பமாகிறது



## ஆரோக்கியத்தை விரும்புவோர் எப்பொழுதும் லைப்பாய் உபயோகித்தே நீராடுவார்

விளையாடும்போதும் சரி, வேலை செய்யும்போதும் சரி, அழுக்கிலிருந்து நாம் தப்ப முடியாது. நம் ஆரோக்கியத்திற்கு நிரந்தரமாக ஆபத்து விளைவிக்கும் நோய்க் கிருமிகள் அழுக்கில் இருக்கின்றன. அக் கிருமிகளைக் கழுவிக் களைந்து உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாப்பது லைப்பாய் சோப்.

அன்றாடம் லைப்பாய் சோப் தேய்த்துக் குளித்து உங்கள் ஆரோக்கியத்தைக் காத்துக்கொள்ளுங்கள். லைப்பாய் ஸ்நானம் புது மலர்ச்சியூட்டுவது.



# கல்கி

## பொருளடக்கம்



'' கல்கி ''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.




| | | |
|---|---|---|
| மலர் 17 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற | ஹேவிளம்பி |
| இதழ் 36 | தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்* | பங்குனிமீ 24உ |


# "கான மயிலாட..."

வருத்தத்துடன் எழுதுகிறோம். பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்கள் ராஜாஜியைப் பற்றிக் குறை சொல்லிப் பேசினார். "சீதள யுத்தம்" நடத்துவதாக ராஜாஜியைப் பற்றி நேருஜி சொன்னார். அவர் அப்படிச் சொன்னார் என்று "தானும் அதுவாகப் பாவித்து", சிறகை விரித்து, ஆடினாற்போல் திரு சுப்பிரமணியம் அவர்கள் சென்னைச் சட்ட சபையில் ராஜாஜி சீதள யுத்தம் நடத்துவதாகச் சொல்லி, தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதித்து விட்டார். வி. கே.ஜான் அவர்கள் தம்முடைய திருத்தப் பிரேரணையை வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டார்.

பண்டித ஜவாஹர்லால் நேரு சொன்னதைத் தாம் திருப்பிச் சொல்லி விட்டால் அதுவே பெருமை என்று நினைத்தாரா அல்லது விஷயத்தை ஆராய்ந்து பேசினாரா என்பது கேள்வி.

யுத்தம், போர்முறையில் நடத்திவிட்டுச் சமாதானம் செய்து கொண்ட பிறகு ஆயுதமின்றி, குண்டுகள் வெடிக்காமல், ஒருவர் பேரில் ஒருவர் வெறுப்பை வளர்த்துக் கொண்டு, ஒரு தேசத்தார் இன்னொரு தேசத்தாரைத் தொந்தரவு செய்வதற்குப் பெயர் "சீதள யுத்தம்". அதற்கும் ஜனநாயகத்துக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. தேர்தல் சமயம் மட்டும் போர் என்றும், தேர்தல் முடிந்த பிறகு எதையும் யாரும் குற்றம் சொல்லி விவகரித்துப் பேசலாகாது என்றும் சொல்வது ஜனநாயக முறைக்கு முற்றிலும் முரணாகும். விவகாரமும் விமர்சனமும் ஜனநாயகத்தின் ஜீவநாடி. அது இல்லாவிடில் ஜனநாயகமில்லை. அதைப் போர் என்றும் சீதள யுத்தமென்றும் பெயரிட்டுத் தடை செய்யப் பார்ப்பது குடியரசு முறைக்கு ஒவ்வாது.

ஜவாஹர்லால் அவர்கள் சொன்னதையே திரு சுப்பிரமண்யம் அவர்கள் கிளிப் பிள்ளைபோல் திரும்பச் சொன்னதில் ரஸமில்லை.

வங்கச் சட்டசபையில் ஆட்சிமொழி சம்பந்தமாகச் செய்யப்பட்ட தீர்மானத்தையும் திரு சுப்பிரமணியம் வெகு ஏளனமாகப் பேசியிருக்கிறார். மற்ற விஷயங்களில் வங்கச் சட்டசபையில் அங்கத்தினர்கள் அபிப்பிராயம் எப்படி இருந்தபோதிலும் ஆட்சி மொழி விஷயத்தில் எவ்வித குழப்பமும் எழவில்லை. எல்லாக் கட்சிக்காரர்களும் முழுமனதாக ஆதரவு அளித்தார்கள். ஆட்சி மொழித் தீர்மானம் எதிர்க்கட்சியிலுள்ளவர் பிரேரேபித்து, வங்க காங்கிரஸ் அங்கத்தினர்கள், மந்திரி சபையினர் யாவரும் பூரண ஆதரவு அளித்துள்ளனர். வங்க மந்திரி சபையிலுள்ள ஸ்ரீ சித்தார்த்தராய் அவர்கள் ராஜினாமா செய்ததையும் ஆட்சிமொழி சம்பந்தமாகச் செய்யப்பட்டுள்ள தீர்மானத்தையும் குழப்பி, ஏளனமாக நிதிமந்திரி சுப்பிரமண்யம் பேசியிருப்பது மிக வேடிக்கையாயிருக்கிறது.

வங்கச் சட்டசபையின் அபிப்பிராயத்தைக் கவனிக்காமற்போனாலும் நமது ராணுவ மந்திரி திரு வி. கே. கிருஷ்ண மேனன் மிகத் தெளிவாகச் சொன்னதையாவது நமது சென்னை மந்திரிகள் கவனிப்பார்கள் என்று எண்ணுகிறோம்.

மந்திரி வி. கே. கிருஷ்ண மேனன், இன்றைய உலகில் ஆங்கிலத்தின் முக்கியத்தை வெகு தெளிவாகக் கூறியிருக்கிறார். ஆங்கிலம் ஆட்சிமொழியாவதற்கு நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தைத் திருத்துவது அவருக்குச் சம்மதம் என்றும் கூறியிருக்கிறார். இதுதான் நாம் விரும்புவது, கோருவது. இதற்கு வி. கே. கிருஷ்ண மேனன்

முழு ஆதரவு கொடுத்தது பற்றி நாம் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

ஆனால் இதற்காக ஓர் வன்மையான இயக்கம் நடத்துவது பற்றித்தான் வி. கே. கிருஷ்ணமேனன் அதிருப்தி தெரிவித்திருக்கிறார். இப்படியொரு இயக்கம் நடத்தவில்லை என்றால் வடநாட்டார் நம்முடைய ஆட்சேபணைகளை உணர்ந்திருப்பார்களா? வி. கே. கிருஷ்ணமேனனும் இப்படித்தான் பேசியிருப்பாரா? இந்த ஜனநாயகத்தில் வாத விவாதம் மிக அவசியம் என்பது இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் எடுத்துக் காட்டுகின்றன.

நாம் இயக்கம் நடத்தியிராவிடில் இந்தியானது தண்டவாளங்களில் ரயில் ஓடுவது போல் எவ்விதத் தடையுமின்றி ஊர் போய்ச் சேர்ந்திருக்கும்.

# கலகப் பேச்சு

''ஆங்கிலம் அகற்றப்படாவிடில், நாங்கள் கலகம் செய்வோம்!'' என்று பீகார் கவிஞர் தினகர் உறுமுகிறார்.

அந்தக் கலகமோ, புரட்சியோ, கிளர்ச்சியோ, யாருக்கு எதிராகச் செய்யப் போகிறார்? தென்னாட்டுக்கு எதிராகவா? அல்லது தில்லி சர்க்காருக்கு எதிராகவா? அல்லது நாட்டில் நிலவும் அமைதிக்கு எதிராகவா?

அந்தந்த ராஜ்யத்தில், அந்தந்த மொழி ராஜ்ய சர்க்கார்களின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும். அம்முறையில் பீகாரில் இந்தி ஆட்சி மொழியாக்கப்படாவிட்டால் கவிஞரும் மற்றவர்களும் கிளர்ச்சி செய்வது நியாயம். ஆனால் மத்திய சர்க்காருக்கு எதிராகக் கலகம் செய்வோம் என்று பொருள்படச் சொல்வது கொஞ்சமும் சரியல்ல. 'கலகம் செய்வோம்' என்று சொல்வது சுலபம். ஆனால் அது ஆபத்தான வார்த்தை.

ஏற்கனவே தென்னாட்டில் ஒரு சிலர் பிரிவினை கோஷமிட்டு வருகிறார்கள். கவிஞர் பேசியது அவர்களுக்கு பலம் தரும். இது மிகவும் வருத்தமளிக்கிறது. 'இத்தனை நாள் நாம் கூறியது சரி' என்று இந்தக் கூட்டத்தார் வாதாடுவார்கள்.

டாக்டர் லோஹியாவோ, ''பொதுமக்களின் பாஷை''யாகிய இந்திதான் வேண்டும் என்று கூப்பாடு போடுகிறார். பீகார் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில் இவருடைய இந்தக் கூப்பாடு சரிதான்! ஆனால் பாரத நாட்டின் எல்லாப் பகுதிகளிலும், எல்லா ராஜ்யங்களிலும் இந்தி பேசப்படுவதில்லையே! இந்தக் கோஷம், பாரத சர்க்காருக்கு எப்படிப் பொருந்தும்?

நாக்பூருக்குத் தெற்கே முழுதும் இந்தி பேசப்படாத ராஜ்யங்களாயிற்றே! ஆகவே இந்தியைப் 'பொதுமக்களின் பாஷை' என்று தென்னாட்டையும் சேர்த்துச் சொல்வது உள்ளத்தைப் புண்படுத்தும் கேலியாகும். சற்றும் நிஜக் கலப்பற்ற பொய்யாகும்.

''தென்னக மக்களின் வடநாட்டு நண்பர் ஜவாஹர்லால் நேரு ஒருவர்தான்'' என்று ராஜாஜி குறிப்பிட்டதைப் பற்றிக் கவிஞர் தினகர் வருத்தப்படுகிறார். வடநாட்டில் ராஜாஜிக்கு எத்தனை எத்தனை நண்பர்கள் இல்லை! எத்தனை பேர்கள் ராஜாஜியைப் போற்றி வரவில்லை! அந்த அன்பை ராஜாஜி புறக்கணித்து விட்டாரே என்று வருத்தப்படுகிறார்.

ராஜாஜி யாருடைய அன்பையும் புறக்கணிக்கவில்லை. ஆனால் இந்தியைப் பாரத சர்க்காரின் ஆட்சி மொழியாகச் செய்வதால் தென்னக மக்களுக்கு இழைக்கப்படும் அநீதியை நேருஜி ஒருவர்தான் உணர்கிறார்; மற்றவர்கள் உணரவில்லை என்றார். அவ்வளவே. இந்த விஞ்ஞான யுகத்தில், இன்றைய ராஜதந்திர உலகில் ஆங்கிலம் எவ்வளவு பயன்படுகிறது என்பதை நன்றாக உணர்ந்து பகிரங்கமாகச் சொல்பவரும் நேருஜி ஒருவர்தான். அதனால்தான் இந்தப் பிரதேசத்தில் ''தென்னக மக்களின் நண்பர் நேருஜி ஒருவர்தான்'' என்று ராஜாஜி குறிப்பிட்டார்.

இந்தி வெறியர்கள் நாட்டின் நன்மையை யோசிக்காமல், தங்கள் குறுகிய எண்ணத்தை வற்புறுத்தி, நேருஜியைத் தம் உண்மை அபிப்பிராயத்துக்கு மாறாக நடக்கும்படி செய்யப் பார்க்கிறார்கள். இதைக் கண்டு ராஜாஜி வருத்தப்படுகிறார். அதைத் தவிர்க்கத்தான் ராஜாஜி முயன்று வருகிறார்.

# பாட்டீல் போட்ட போடு!

மத்திய அரசாங்க அமைச்சர் திரு எஸ். கே. பாட்டீல் நிர்வாகத்தில் உள்ள குறைபாடுகளைத் தைரியத்துடன் கட்சிக் கோட்பாடுகளுக்கும் ஒழுங்கு முறைக்கும் கட்டுப்பட்டுப் பயப்படாமல் எடுத்துச் சொல்லி வருவதைப் பாராட்ட வேண்டும்.

திட்டக்கமிஷன் திட்டம் போடுகிறது. லட்சியங்களை ஏற்படுத்தி விட்டு, அதை நிறைவேற்றத் தாக்கீதும் அனுப்பி விடுகிறது. அத்துடன் அதன் வேலை தீர்ந்து விட்டது போல் இருந்து விடுகிறது. மத்திய சர்க்காரின் நீர்ப்பாசன மின்சார இலாக்கா அணைக்கட்டுகளைக் கட்டி, மின் நிலையங்கள் அமைத்துத் தந்தால் அதன் வேலை பூர்த்தியடைந்து விட்டதாகக் கருதி சும்மா இருந்து விடுகிறது. உணவு விவசாய இலாக்கா உற்பத்திப் பொருளை மண்டல வாரியாகவும் பிரதேசவாரியாகவும் விநியோகிக்க நடவடிக்கை மேற்கொள்ளும். பற்றாக்குறை உள்ளதென்று தோன்றினால், இறக்குமதிக்கு வகை செய்யச் சொல்லி அந்த இலாகாவுக்கு அறிக்கை விடும்.

ஆனால் உண்மையில் விவசாயம், உணவு உற்பத்தி ராஜ்ய சர்க்கார்களின் பொறுப்பு. அந்தப் பொறுப்பை அவர்கள் எவ்வாறு

# ஒத்துழைப்பில்லை !



மத்திய மந்திரி எஸ். கே. பாட்டீல், சர்க்கார் இலாக்காக்கள் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாமல் வேலை செய்கின்றன என்று மக்கள் சபையில் குறை கூறினார்.

நிறைவேற்றுகிறார்கள் என்பதைக் கண்காணிக்க மத்திய அரசாங்கம் முற்படுவதில்லை. கண்காணிப்பதை ராஜ்ய அரசாங்கங்கள் விரும்புவதுமில்லை. அப்படி ஒரு சமயம் முற்பட்டாலும் உருப்படியான பலன் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. ஏனென்றால் பிரதேச அரசாங்கங்கள் கொடுக்கும் விவரங்களைத் தானே அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்? மழையின்மையால் திட்டங்களெல்லாம் சிதறி விட்டது என்று சொல்லும்ஒரு ராஜ்யம்; வழங்கப்பட்ட பாசன வசதிகளை ஏற்று அதற்குத் தக்க தண்ணீர் வரி செலுத்த ரயத்துகள் முன்வரவில்லை என்று குறைகூறும் மற்றொரு ராஜ்யம். மத்திய அரசாங்கத்திலிருந்து வழங்கப்பட்ட மான்யம் போதவில்லை, மேலும் கணிசமான அளவுக்கு அளிக்கப்பட வேண்டும் என்று கோரிக்கை யனுப்பும் மற்றொரு பிரதேசம்.

இவ்வாறு ஒரு இலாகாவுக்கும் மற்றொரு இலாகாவுக்கும் தொடர்பில்லாது, அவரவர்கள் செய்யும் காரியங்கள் செவ்வனே இணைக்கப்படாமல் இருப்பதாலும் ராஜ்ய சர்க்கார்களின் பல்வேறு முரண்பாடான நடவடிக்கைகளாலும், அல்லது நடவடிக்கையே எடுக்கப்படாததாலும் தான், இப்போது நிலவும் பரிதாபகரமான நிலைமையில் பாரதம் இருக்கிறதென்று ஸ்ரீ பாட்டீல் தெளிவுபடுத்தினார். பொது மக்கள் ஊகமாகக் கொண்டிருந்த கருத்துக்களுக்கு இப்போது அதிகாரபூர்வமாக உறுதி கிடைத்திருக்கிறது.

அதுமட்டுமல்ல; உணவு விஷயத்தில் பாரதம் முழுத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளும் அளவுக்கு உற்பத்தி செய்தால் மட்டும் போதாது, வருஷந்தோறும் 50 கோடி ரூபாய் மதிப்புள்ள தானிய வகைகளை ஏற்றுமதி செய்யும் நிலையில் இருக்கவேண்டும், அதுதான் நம் நாட்டுக்கு லட்சியமாக இருக்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். இது அடையக் கூடாத, அடைய முடியாத லட்சியம் அல்ல. ஜனத்தொகை பெருகிக்கொண்டே வந்தபோதிலும், மக்களின் உணவுப் பழக்கங்கள் மாறுபட்டு அதிகமான ஜனங்கள் அரிசி உட்கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தாலும், இந்த லட்சியத்தை அடைய முடியும்; அடைய வேண்டும் என்று அவர் ஆசகமாக அறிவித்திருக்கிறார். இவ்வளவு ரூபாய் திட்டங்களுக்கென்று செலவு செய்யப்பட்டது என்று கணக்குக் காட்டிவிட்டுத் திருப்தியடைந்துவிடுகிறார்களே தவிர, எவ்வளவு பலன் கிடைத்தது என்பதில் கவனம் செலுத்துவதில்லை. இந்தக் குறைபாடுகளை யெல்லாம் இனியேனும் கவனித்து நிவர்த்தி செய்வார்களா ?

# நேயர்களுக்கு நற்செய்தி

இவ்வாரத்திய இதழில் முடிவுபெறும் 'பொருளாதாரமும், பொதுமக்களும்' என்ற கட்டுரைத் தொடரைப் படித்து வாசகர்கள் நல்ல பலன் அடைந்திருப்பார்கள்.

இத்தொடர்க் கட்டுரைகளை இருபது வாரங்களுக்குமுன் ஆரம்பித்து வைத்தபோது கல்கி நேயர்களுக்கு நாட்டின் பொருளாதார நிலையைப் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற அளவுகடந்த ஆவலைப் பூர்த்தி செய்ய வேண்டியே இப்பகுதியை ஆரம்பித்திருக்கிறோம் எனக் குறிப்பிட்டோம். இந்த நோக்கம் எதிர்பார்த்த அளவுக்கு அதிகமாகவே நிறைவேறியுள்ளது என்பதை வாசகர்களிடமிருந்து கிடைத்துள்ள பல கடிதங்களிலிருந்தும் பாராட்டுதல்களிலிருந்தும் அறிந்து திருப்தியடைந்தோம். கல்லூரி மாணவர்கள் பலர் இக்கட்டுரைகள் மூலம் பயனடைந்தனர் என்று அறிந்து மகிழ்கிறோம்.

பாரத நாட்டின் பொருளாதார நிலை எவ்வாறு இருக்கிறது. அதன் அடிப்படையான அமைப்பு எத்தகையது. நம் நாட்டிலுள்ள முன்னேற்றத்துக்கான வாய்ப்புகள் எவ்வளவு விரிவானவை. அவைகளெல்லாம் எவ்வாறு பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. மேலும் துரிதமாக முன்னேற்றமடைய நாம் வகுத்துள்ள திட்டங்கள், அவற்றின் மூலம் கிடைத்துள்ள பலன்கள், நாம் புரிந்த சாதனைகள்,- முதலியபல்வேறுஅம்சங்களைப்பற்றியெல்லாம் இக்கட்டுரைகளின் வாயிலாகக் கூறப்பட்டன. உள்நாட்டு, வெளிநாட்டு வியாபார நிலவரங்களைப் பற்றியும், வர்த்தக ஸ்தாபனங்கள், கூட்டுறவு நிலையங்கள், பாங்கிகள், நாணயச் செலாவணி, வியாபாரத்துக்கான போக்குவரத்துச் சாதனங்கள் முதலிய முக்கியமான விஷயங்களைப் பற்றியும் இக் கட்டுரைகளில் விளக்கப்பட்டு, அவசியமான புள்ளி விவரங்களும் கொடுக்கப்பட்டன. புள்ளி விவரங்கள் வாயிலாகத் தான் ஒரு சமூகத்தின் பொருளாதாரத் துறையின் அடிப்படையான அம்சங்களைச் சரிவரப் புரிந்துகொள்ள முடியும். இவைகளிலிருந்து புறப்படும் கருத்துக்களை மட்டும் நாம் நம்முடைய தினசரி நடவடிக்கைகளில் அடிக்கடி கையாளுகிறோம். கணக்கு விவரங்களை ஒதுக்கிவிட்டு, அதனால் கிடைக்கக் கூடிய முடிவான கருத்துக்களை மட்டும் கொள்ளுவது சுலபமேயானாலும், அறிவு வளர்ச்சிக்கும் சிந்தனைத் தெளிவுக்கும் அடிப்படையான விவரங்கள் இன்றியமையாதவை. இவைகளைப் போதிய அளவுக்கு வழங்கி, பொதுமக்களுக்கு இத்துறையில் ஆர்வத்தையும் வளர்த்திருக்கின்றன இந்தக் கட்டுரைகள்.

ஒரு நாட்டின் பொருளாதாரம் என்பது மிகவும் விரிவானது. கடல் போன்றது. பல பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பகுதியும் ஆராய்ச்சி வளர்ச்சியினால் நுணுக்கங்கள் மிகுந்து தனித்தொகுதியாக உள்ளது. இப்பகுதிகளைப் பற்றிய விஷயங்களையெல்லாம் சுருக்கமாகவாவது விளக்க வேண்டுமானாலும் பல கட்டுரைத் தொடர்கள் தேவைப்படும். எனவே அடிப்படை அம்சங்களையும் முக்கியமாக உள்ள கருத்துக்களையுமே சாமானிய அறிவுக்கேற்ற அளவில் இந்தக் கட்டுரைகள் விளக்கின. கட்டுரைகளின் அமைப்பும் விஷயக் கோவைகளும் பாரதியார் கண்ட கனவு என்ன என்பதை முன்னுரையாகக் கொண்டு இக்கனவு எவ்வளவு தூரம் பலித்ததென்பதைக் கடைசி அத்தியாயமாக முடித்திருப்பது இத்தொகுப்பில் ஊடுருவி நிற்கும் ஒருமைப்பாட்டை வெளிப்படுத்துகிறது. இவற்றைக் கல்கி வாசகர்களின் நலனுக்காகத் திரு க. சந்தானம் வழங்கியதற்கு நன்றி.

இத்தொடர்க் கட்டுரைகள் வாசகர்களின் பொது அறிவு வளர்ச்சிக்கு மிகவும் உதவியது என்பதை அறிந்த திரு சந்தானம் இதைத் தொடர்ந்து மேலும் சில கட்டுரைகள் மனமுவந்து எழுதியளித்துள்ளார். ''செல்வமும்சுதந்திரமும்'' என்று தலைப்புக் கொடுத்து, செல்வம் என்பது என்ன, அதன் சொரூபங்கள், சுதந்திரம் என்பது யாது, அதன் உட்பிரிவுகள், அரசியல் சுதந்திரம், மத சுதந்திரம், இவற்றுக்குள்ள சம்பந்தம் முதலிய அடிப்படையான விஷயங்களைப் பற்றியெல்லாம் இந்தக் கட்டுரைகளில் ஆராயப்பட்டுள்ளது. பொருளாதாரத்தின் கருவாக உள்ளது செல்வம். செல்வத்தை உண்டாக்குவதும் விநியோகிப்பதுமே பொருளாதாரத்துக்கு விஷயமாக அமைந்திருக்கிறது. இச் செல்வம் சுதந்திரத்தின் அடிப்படையில் கொழித்தால் மட்டுமே நாட்டுக்கும் மக்களுக்கும் நலன் உண்டாகும். எனவே, சுதந்திரத்தைப் பற்றியும் நாம் அறிந்து கொள்ளுவது இன்றியமையாதது. சுதந்திரத்துக்காக நாம் போராடி வெற்றி கொண்டு சுதந்திரத்தை அடைந்து விட்டாலும், அரசியல் சாஸ்திரத்தில் சுதந்திரத்தின் தத்துவங்கள், கருத்துக்கள், லட்சணங்கள், உட்பிரிவுகள் முதலியவற்றைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டியது அறிவு முதிர்ச்சிக்குச் சின்னம். இரண்டாவது தொடராக அமைந்த 'செல்வமும் சுதந்திரமும்' என்ற கட்டுரைகள் இவ்வகையில், ஒரு சமூகத் துறையிலிருந்து அடுத்த துறைக்கு ஒரு பாலம் போலவே இருக்கின்றன. அவை ஏப்ரல் 13உ. கல்கி புத்தாண்டு இதழிலிருந்து தொடராக வெளிவரும். முதல் தொடரைப் படித்து இன்புற்றது போலவே இவ்விரண்டாவது தொடரும் வாசகர்களுக்கு இன்பம் தரும் என்று நம்புகிறோம்.

*** *** ***

இந்த மலரில் வெ. ராஜேந்திரன் எழுதும் 'பொங்கிவரும் பெருநிலவு' என்னும் சமூகத் தொடர்கதையும், 'குமரி முத்து' என்னும் புதிய பாலர் தொடர் கதையும் ஆரம்பமாகின்றன. இவை தவிர சங்க இலக்கியக் காட்சிகளும், கம்பன் வாழ்க்கைக் காட்சிகளும் மூன்று வர்ணச் சித்திர மடலாக மலரில் மிளிருகின்றன. புத்தாண்டுக்கென்றே ராஜாஜி அவர்கள் எழுதியிருக்கும் விசேஷக் கட்டுரையும் ஸ்ரீமதி மீராபென் அவர்கள் கட்டுரையும் மற்றும் பல பிரபல எழுத்தாளர்களின் சிறு கதையும் மலரில் வெளியாகின்றன. சுமார் நூற்றுமுப்பது பக்கங்களுக்கு மேலுள்ள இந்த மலரின் விலை வழக்கமான முப்பது நயா பைசாதான் என்பதையும் நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

# அருள் வாக்கு

நல்ல ஒழுக்கம் இருந்தால் போதுமென்றும், கடவுள் அவசியமில்லையென்றும் சிலர் கூறுகின்றனர். இது தவறான கருத்து. கடவுள் அருள் இல்லையானால் ஒரு தனி நபருக்கோ, நாட்டுக்கோ விமோசனம் ஏற்பட முடியாது.

சுதந்திரம் கிடைப்பதற்கு முன்னால், தேசிய வாதிகளை, "கடவுள் நம்பிக்கையையும் மதத்தையும் வற்புறுத்தாமல் தேசத்துக்கு மாத்திரம் அதிக முக்கியத்துவம் அளிப்பது சரியா?" என்று கேட்டிருக்கிறேன். சுதந்திரம் வந்து விட்டால் பிறகு எல்லாம் சரியாகி விடுமென்று அவர்கள் பதிலளித்தனர்.

நம்முடைய தற்போதையக் கஷ்டங்களுக்குக் காரணம் சென்ற பல வருஷங்களாகக் கடவுளையும் மதத்தையும் நாம் மறந்ததுதான். இப்பொழுது ஒரு குழந்தையைக் கட்டுப்படுத்துவது கூடக் கஷ்டமாக இருக்கிறது. ராமநாமத்தையாவது காந்திஜி பரப்பி வந்தார். இப்பொழுது அதுவும் இல்லை.

சில வருஷங்களுக்கு முன் ஒரு பள்ளிக்கூடத்துக்குப் பிரதம மந்திரி விஜயம் செய்தபோது, முதலில் கடவுள் வணக்கம் பாடப்படவிருந்தபோது அனைவரும் எழுந்து நின்றனர். அவர்களை உட்காருமாறு பிரதம மந்திரி கட்டளையிட்டார். முடிவில் 'ஜனகண மன' பாடப் பட்டபோது அனைவரையும் அவர் எழுந்திருக்கச் சொன்னார். ஒரு தலைப்பக்ஷமாக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது என்பதை எடுத்துக் காட்டவே இதைப் பற்றிக் கூறினேன். தேசத்துக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டியதுதான். ஆனால் அரசியல் சுதந்திரம், பொருளாதார பலம், ராணுவ பலம் முதலியவை சாசுவதமானவையல்ல. தேசத்துக்கு ஹிட்லர் கொடுத்த முக்கியத்துவத்தை விட அதிகமாக யாராவது கொடுக்க முடியுமா? இருந்தும் அவருடைய ஜெர்மனிக்கு அனர்த்தம் நேர்ந்து விட்டது.

அரசியல், பொருளாதார, ராணுவ ரீதியில் எந்த நாட்டுக்கும் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படக்கூடும். ஆனால் அதன் ஆத்ம சக்திதான் நிரந்தரமானது. ஒரு நாடு ஆத்ம பலத்தை இழந்தால், அது எவ்வளவுதான் பலம் பொருந்தியதாக இருந்தாலும் ஜீவித்திருக்க முடியாது.

—ஸ்ரீசங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# கன்னியாகுமரி பஸ் விபத்து!

கன்னியாகுமரி ஜில்லாவில், முதுக்கத் என்ற ஊரில் திருவிழா நடைபெற்றது. இந்தத் திருவிழாவுக்குத் திருவனந்தபுரத்திலிருந்து ஏராளமான பக்தர்கள் வருவார்கள். இவர்களுடைய போக்குவரவு வசதிக்காகச் சென்னை சர்க்கார் பஸ்கள் அனுப்பி வைத்தனர். அந்த பஸ்களில் ஒன்று எண்பத்தெட்டு பிரயாணிகளைத் தாங்கிக் கொண்டு வந்து கொண்டிருந்தது. வழியில் பஸ் சற்றுச் சாலை ஓரமாகச் சென்றதில் பாதை சரிந்து, பஸ் கவிழ்ந்து விட்டது. எண்பத்தேழு பிரயாணிகள் காயமுற்றனர்; ஒருவர் இறந்துவிட்டார்.

இந்த பஸ் விபத்துக்குள்ளான அத்தனை நபர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இந்த விபத்தில் உயிர்துறக்க நேர்ந்த பிரயாணியின் குடும்பத்தாருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

இத்தகைய விபத்து நேர்ந்ததற்குக் காரணம் கண்டு, இத்தகைய விபத்துக்கள் நேராமலிருக்கச் சர்க்கார் முயற்சிகள் எடுத்துக் கொள்ள வேண்டும். உதவி செய்வதாகச் சொல்லி மக்களுக்கு உபத்திரவம் விளைவிக்கலாகாது அல்லவா?

# தேநீர் நிலையம்

சென்னையில் டீ போர்டார் ஒரு முதல்தரமான தேநீர் நிலையத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். சென்னை மவுண்ட் ரோட் பழைய பலோட்டோ கட்டடத்துக்குள் நுழைந்து மாடிப்படி ஏறினால் நல்ல மெத்தைகள் போட்ட நாற்காலிகள் கொண்ட குளிர்ந்த அறையில் அழகான சூழ்நிலையில் உங்களுக்கு எந்தவிதமான தேநீர் வேண்டுமோ அதை வழங்கத் தயாராயிருக்கிறார்கள். குளிர்ந்த தேநீர் வேண்டுமானாலும் சரி, சூடான தேநீர் வேண்டுமானாலும் சரி சிற்றுண்டியுடன் வழங்குவார்கள். அதுமட்டுமல்ல; டார்ஜிலிங் தேயிலை, நீலகிரி தேயிலை, அஸ்ஸாம் தேயிலை, கேரளா தேயிலை ஆகிய இவைகளில் எந்த வகை தேயிலையில் தயார் செய்யப்பட்ட தேநீர் வேண்டும் என்கிறீர்களோ அதைக் கொண்டு தரத் தயாராய் இருக்கிறார்கள். நிம்மதியாக இருந்து சாப்பிடலாம். தேயிலையைப் பற்றிய விவரங்கள் தெரிய வேண்டுமானால் அதற்கு வேண்டிய இலக்கியங்கள் தருகிறார்கள். தேயிலையைப் பற்றி ஏதாகிலும் தெரிய வேண்டுமென்று நேரிடையாகக் கேட்டால் விளக்கத் தயாராகஇருக்கிறார்கள். தேயிலை பானம் எப்படித் தயார் செய்வது என்று கற்றுக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறார்கள். தேயிலையின் வளர்ச்சியைப் பற்றிய ஒரு திரைப்படமும் அவர்கள் போட்டுக் காண்பிப்பார்கள்.

இப்படியெல்லாம் 'டீ போர்டார்' செய்வதற்குக் காரணம் தேயிலைத் தொழில் நமது நாட்டில் மிக முக்கியமானதோர் தொழிலாக இருப்பதுதான். இத்தொழிலில் சுமார் பதினைந்து லட்சம் மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். அத்துடன் நமது அந்நிய செலாவணியைச் சம்பாதிக்கும் பெரிய ஏற்றுமதிப் பொருள் கூடத் தேயிலைதான். இப்பொழுதெல்லாம் தேயிலைக்கு வெளிநாட்டு மார்க்கெட்டில் பலத்த போட்டி யிருக்கிறது. நமது உள்நாட்டு வியாபாரத்தைப் பெருக்கிக் கொண்டால் நம் தேயிலைத் தொழில் எவ்வித கஷ்டநஷ்டங்களுக்கும் உள்ளாக வேண்டியிராது. நம் தேசம் மிகப் பெரிய தேசம். நம் நாட்டு மக்கள் நல்ல தேநீர் குடித்துப் பழக்கப்படுத்திக் கொண்டு விட்டார்களானால் நம் தேயிலை உற்பத்தி நமக்கே போதாமல் போய்விடலாம். ஆகவே, நம் உள்நாட்டுத் தேவையைப் பெருக்குவதற்காக வேண்டி டீ போர்டார் இந்தத் தேநீர் பிரசார நிலையத்தை ஆரம்பித்திருக்கிறார்கள்.

இந்தப் பிரசார நிலையத்தை இவ்வளவு அழகுபடுத்தியவர், கன்ட்ராக்டர் ரவால்கிருஷ்ணய்யர் அவர்கள்.

இந்த அழகான தேநீர் நிலையத்துக்குச் சென்று, அவர்கள் தரும் சுவையான தேநீரை ஒரு முறை அருந்தி விட்டால் மீண்டும் அதே தேநீர்தான் வேண்டும் என்று விரும்பிக் கேட்பீர்கள்.

*தேநீர் நிலையத்தில் டீ போர்டு அதிகாரிகள் பத்திரிகை நிருபர்களுடன் பேசிக் கொண்டிருக்கின்றனர்.*






# மகத்தான சித்திரம்

# வஞ்சிக்கோட்டை வாலிபன்

## ஏப்ரல் 11உ

தமிழ்நாடெங்கும் வெளிவருகிறது

# புதுமாதிரி

# டெக்

# வாங்குங்கள்





இந்த டூத்பிரஷில் மட்டுமே கீழ்கண்ட
விசேஷ அம்சங்கள் உள்ளன

* கைக்கடக்கமான பிடி * 'பீட்டன்' முடிகள் * நேர்த்தெடுக்க இருவித தடிப்பாகம்

## விசேஷ சலுகை

ஆரம்பத்தில் கொஞ்ச காலங்களுக்கு இரண்டு டெக் டூத்பிரஷ்கள்
அடங்கிய இந்த பாக்கெட் குறைந்த
விலைக்குக் கிடைக்கும்!




ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
ஆப் இந்தியா பிரைவேட் லிட்.

## 24

**பு**லன்களை அடக்கும் முயற்சியை விரதமாக ஒரு ஜன்மத்தில் காத்தோமானாலும், அதன் பயன் நமக்கு ஏழு ஜன்மத்திலும் உதவும். கீதையில் சொல்லப்பட்ட உவமையையே வைத்துச் சொல்கிறார் முனிவர் :

**ஒருமையுள் ஆமை போல**
**ஐந்தடக்கல் ஆற்றின்**
**எழுமையும் ஏமாப்பு உடைத்து.**

ஐந்து என்பது ஆமையின் தலையும் நான்கு கால்களும். ஆமை தன் தலையையும் நான்கு கால்களையும் அபாயம் கண்டவுடன் தன் ஓட்டுக்குள் இழுத்துக் கொள்வது போல், மனிதன் தன் ஐந்து புலன்களையும் நுகர்ச்சிப் பொருள்களினின்று இழுத்து உள்ளடக்கிக் கொள்ள வேண்டும். இந்த அடக்கமே யோகம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுவது. அந்த யோகப் பயிற்சி ஆன்மாவை மலம் தீரச் சுத்தப்படுத்தும். அது மறுஜன்மத்துக்கும் உதவும். முயற்சி வீண் போகாது.

* * *

**ம**னம், மெய், மொழி இவற்றையெல்லாம் அடக்குதல் வேண்டும். ஆனால் உலக வாழ்க்கையைக் கருதி முனிவர் சொல்கிறார்: எதைக் காக்காத போதிலும் நாக்கை அடக்கியாள்க என்கிறார். மனத்தைக் கட்டுப்படுத்த உனக்குச் சக்தி இல்லாமல் போகலாம், பேச்சையாவது அடக்கினையானால் அதுவே பெரும் நன்மை தரும். இல்லையாயின் பெருங் கஷ்டத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

**யாகாவா ராயினும்**
**நாகாக்க ; காவாக்கால்**
**சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.**

முனிவர் ஒரு விஷயத்தை எடுத்துச் சொன்னால், வாழ்க்கை விவகார முறைப்படி எது முக்கியமானது என்பதைப் பிரித்து எடுத்து அதை வற்புறுத்துவார். காரணமும் காட்டுவார். எல்லாவற்றையும் சமமாகச் சொல்லிக் கொண்டு போய் எதுவும் அழுத்தம் பெறாமல் விட்டு விட மாட்டார். அத்தகைய உபதேசம் வீணாகும். குடியானவன் விதையை விதைத்தால், அது நன்றாக முளைக்கும்படி விதைப்பான்; அந்த முறையில் வள்ளுவர் உபதேசத்தை மனத்தில் நடுவார். வள்ளுவருடைய தனிச் சிறப்பு இது. இதற்கு இந்தக் குறள் மிக நல்ல உதாரணமாகும்.

மற்றப் புலன்களைக் காப்பதும் அவசியமேயாகும். கவனத்தைத் தளர்த்தல் ஆகாது. ஆயினும் அஜாக்கிரதையாகவோ கோபமாகவோ பேசி விட்ட பேச்சை மீட்டிப் பின் திரும்பச் செய்ய முடியாது.

உன்னுடைய எண்ணம் நாவின் வழி வாகனம் ஏறிச் செல்லுவதற்கு முன்னமேயே காப்பாற்றிக் கொள் என்கிறார். இல்லையாயின் துயரப் பட்டுக் கொண்டு சாவதே உன் கதியாகும் என்கிறார். 'சோகாப்பர்' என்பதில் இந்த வேகம் காண வேண்டும்.

**து**யரத்துக்குக் காரணம் இன்னும் விளக்கிச் சொல்கிறார். தீயினால் சுட்ட புண் சில நாள் கழிந்து ஆறிப் போகும். ஆனால் சொல்லிழுக்குப் பட்டு உன் நாவினால் நீ பிறருக்கு உண்டாக்கும் மனப் புண் ஆறாது. என்றைக்கும் அது ஆறாமல் இருப்பதைக் காண்பாய்; கண்டு துயரப் படுவாய். ஆகையினால் தீர யோசித்து எந்தப் பேச்சையும் பேசுவாய். நமக்கு வேண்டியவன் இவன் கோபித்துக் கொள்ள மாட்டான், இவள் என் மனைவி என்ன சொன்னால் என்ன ஆகும் என்றெல்லாம் எண்ணி நாவைக் காக்காமல் போகாதே—என்கிறார்.

**தீயினால் சுட்டபுண்**
**உள்ளாறும் : ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு.**

அடித்தால் அடியைப் பொறுத்துக் கொள்ளலாம். ஆனால் அவமானத்தைப் பொறுக்க மாட்டார்கள். அவமானத்தை உண்டாக்குவது நாம் சுடச்சுடப் பேசும் சொல். அன்பின் அளவாகும், அந்த அன்புள்ள மனம் நமது சொல்லினால் அடையும் வேதனையும் என்பதை மறவாதே.

நாவானது தீயைப் போலவே சுடும் என்கிறார். ஆகையினால் எதைக் காவாமல் போனாலும் நாவைக் காப்பாய் என்கிறார்.




## தனி ஆசிரியர் நிலை

'வேலையில்லாதோர்க்கு வேலை வாய்ப்பு' என்ற திட்டத்தின்படி கிராமங்களில் தனி ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டோம். எங்களது மூன்று வருடப் பணி முடிந்த பின் மீண்டும் இரு ஆண்டுப் பயிற்சி பெற்றால்தான் மேற்கொண்டு ஆசிரியராகப் பணியாற்றலாம். எங்களுக்கு வேனிற்காலவிடு முறையின் போது ஆறு வாரம் குறுகியகாலப் பயிற்சி வேறு அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காரணத்தைக் காட்டி எங்களது இரு வருடப் பயிற்சிக் காலத்தை ஒரு வருடமாக்க வேண்டும், அல்லது பயிற்சி பெறும் மற்றவர்களுக்கு அளிக்கப்படும் ரூ. 18 உதவித் தொகையைக் காட்டிலும் அதிக உதவித் தொகை கொடுக்க வேண்டும் என்ற கோரிக்கைகள் நிராகரிக்கப் பட்டு விட்டன.

பத்தாவது படித்து முடித்தவுடன் நேராகப் பயிற்சி பெறுபவர்களுக்கும், இரண்டு மூன்று வருடங்கள் ஆசிரியராகப் பணியாற்றிய எங்களுக்கும் வேறுபாடே இல்லையா? உதவித் தொகை வேண்டுமாயின் பதினெட்டாகவே இருந்து விட்டுப் போகட்டும்; பயிற்சிக் காலத்தையாவது ஓர் ஆண்டாகச் செய்யக் கூடாதா? எமது அனுபவமே ஒரு ஆண்டுப் பயிற்சிக்கு ஈடு ஆகாதா?

கடபாளையம்
17—3—58 ஒரு தனி ஆசிரியர்

## வேற்றுமை வேண்டாம்

ஆரம்பப் பாடசாலையில் 5-வதுவகுப்புக்குக் கீழ் சொல்லிக் கொடுக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும், 6,7,8 வகுப்புகள் சொல்லிக் கொடுக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கும் இதுநாள் வரை சம்பளம் வித்தியாசமில்லாமல் ரூ. 45—2—85 என்ற விகிதப்படி கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் இனிமேல் 5-வதுக்குக் கீழ் பாடம் சொல்லிக் கொடுக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்கு ரூ. 40—1—48 என்ற விகிதப்படியும் 6, 7, 8 வகுப்புகளுக்குச் சொல்லிக் கொடுக்கும் செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்குப் பழைய விகிதப்படியே அதாவது ரூ. 45-2-85 என்ற விகிதப்படியும் சம்பளம் கிடைக்குமாம். இந்த வேற்றுமை ஏன்? செகண்டரி கிரேடு ஆசிரியர்களுக்குள்ளேயே வித்தியாசமான சம்பளம் கொடுக்கப்படுவது நீதியா?

சேலம்
21—3—58 பழனியப்ப பிள்ளை

## உபகாரச் சம்பளம் தேவை

ஓராசிரியர்கள் சார்பில் சமர்ப்பிக்கப் பட்ட கோரிக்கைகள் அனைத்தையும் அரசாங்கம் நிராகரித்து விட்டது. தேசீயக் கல்விக் கவுன்சிலும் ஆசிரியர் நியமனத்துக்கு மெட்ரிகுலேஷன் தேர்வும் இரண்டாண்டு காலப் பயிற்சியும் பெற்றிருக்க வேண்டும் எனத் தீர்மானித்து விட்டது. இந்நிலையில் எஸ்.எஸ்.எல்.ஸி. தேர்வுடன் ஆசிரியர் பயிற்சி பெறும் அனைவருக்கும் பாகுபாடின்றி உபகாரச் சம்பளமாக மாதம் ரூ. 40-க்குக் குறைவின்றிக் கொடுக்க வேண்டும். மேற்படி உபகாரச் சம்பள உயர்வை பயிற்சி பெறும் ஓராசிரியர்களுக்கு உடனடியாக அளிப்பதே நீதியும் நியாயமுமாகும்.

துறைவட்டம்
17—3—58 மு. பெரியசாமி

## வேற்றுமை ஏன்?

எலிமெண்டரி பள்ளிகளில் (1 முதல் 5 வகுப்பு வரை) வேலை செய்யும் செகண்டரி கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்களின் சம்பளத்தை ரூ. 40 ஆகக் குறைக்கும் புதிய உத்தரவைச் சென்னை சர்க்கார் விடுத்திருக்கிறது. ஆனால் உயர்தர ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்யும் செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் எந்த வகுப்பில் போதித்தாலும் அவர்களுக்கு இந்த உத்தரவால் பாதகம் ஏற்படாது. ஒரே தரத்திலுள்ள ஆசிரியர்களிடையே சம்பள வித்தியாசம் காட்டுதல் வருந்தத் தக்க விஷயமாகும்.

கோவை
18—3—58 மலையன்

## தமிழார்வம் போதவில்லை

சென்னையில் உள்ள ரேடியோ நிலையம் தமிழ்நாட்டில் இருந்து கொண்டு அவர்கள் அளிக்கும் கதம்ப நிகழ்ச்சிகள் தமிழ் வளர்ச்சிக்கு எவ்விதத்திலும் ஆதரவு அளிப்பதாகத் தெரியவில்லை. அனேகமாக எல்லாவிதமான தெலுங்கு நிகழ்ச்சிகளையும் விஜயவாடாவிலிருந்து அஞ்சல் செய்கிறார்கள். விஜயவாடா, திருச்சி நிலையத்தைவிட மிகவும் சக்தி வாய்ந்த நிலையம். சென்னையில் உள்ளவர்கள் மிகவும் சௌகரியமாக விஜயவாடா நிலையத்தை நேரடியாகக் கேட்கலாம். அஞ்சல் செய்யும் விஷயத்தில் சென்னை நிலையமானது திருச்சி நிலையத்தில் நடக்கும் கதம்ப நிகழ்ச்சிகளை அவ்வளவு தமிழ் ஆர்வத்துடன் செய்வதில்லை. இதுதான் போகிறது என்று பார்த்தால், சென்னை நிலையம் அவர்களாகக் கொடுக்கும் கதம்ப நிகழ்ச்சி என்ன என்றால் ஹிந்தி திரைகானமும், ஹிந்தி ஒலிப்பதிவு செய்யப்பட்ட பாட்டுக்களும்தான். இம்மாதிரியான கதம்ப நிகழ்ச்சிகளால் தமிழுக்குச் சரியான பரிபூரண ஆதரவு கிடைக்கப் பெறுவதில்லை. சென்னை நிலைய நிர்வாகஸ்தர்கள் அவர்களாக, தமிழில் கதம்ப நிகழ்ச்சிகள் கொடுக்க முடியாவிடில், திருச்சி நிலையத்தில் நடக்கும் நிகழ்ச்சிகளை அஞ்சல் செய்தாலும் போதும்.

சைதாப்பேட்டை
13—3—58 ஆர். கோபாலன்

## வானொலியில் குரல் பரீட்சை

அகில இந்திய வானொலியில், வானொலி நிகழ்ச்சிக்கு நாடக நடிகர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை வியப்பை அளிக்கிறது. முதலில்

# மேஜை



நடிக்க விரும்புகிறவர்கள் தங்கள் சொந்த மனுவைப்போட்டதும், அங்கிருந்து அவர்கள் அச்சடித்த மனு ஒன்றை அனுப்புகிறார்கள். அதைப் பூர்த்திசெய்து திருப்பி அனுப்பியவுடன் அவர்கள் ஒரு நாளைக் குறித்து அன்று நடிக்கத் தகுதியுள்ள குரலா என்பதை அறியக் குரல் பரீட்சை செய்கிறார்கள். அது நடந்த சில தினங்களுக்குள் முடிவைத் தெரிவிக்கிறார்கள். இது போன்று என் நண்பர்களில் பலர் சென்று வந்திருக்கிறார்கள். ஆனால் ஒருவராவது தேர்ந்தெடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. எல்லோருக்குமா குரல் சரியாக இருந்திருக்காது?

சென்னை
24-3-58 கே. ஜெயகோபால்

## வானொலியில் துதி பாடல்கள்

சென்னை, திருச்சி வானொலி நிலையங்களில் ஞாயிற்றுக்கிழமைகளில் பிற்பகல் 2-30 மணிக்குத் துதிபாடல் நிகழ்ச்சி அமைக்கப்பட்டு அதில் தேவாரம் - திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைப் பாடல்களுடன் அருணகிரியார் அருளிச் செய்த கந்தரலங்காரம், கந்தரநுபூதி, திருப்புகழ் என்பனவும், தாயுமானவர் பாடல், இராமலிங்கசுவாமிபாடல், பிள்ளைத் தமிழ் முதலிய பக்திக்குரிய பிற பாடல்களும் பாடப்பட்டு வருவது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இப்போது சில நாட்களாகக் காலையில் கடவுள் வணக்கமாக வானொலி நிகழ்ச்சியில் நாயன்மார்கள் அருளிச் செய்த அருமையான மோக்ஷமாகிய தேவார திருவாசகங்கள் அடங்கிய துதிப் பாடல்கள் பாடப்பட்டு வருவது வரவேற்கத் தக்கது.

இலங்கை
9—3—58 சி. செல்லத்துரை

## நெல் இருந்தும் பட்டினி!

கிராமப் பிரதேசங்களில் ஏழை மக்களும், மிராசுதார்களும் அறுவடை செய்தும், அந்த நெல்லை மின்சாரத் தட்டு காரணமாக அரைக்க முடியாமல் திண்டாடுகின்றனர். ஜனங்களை 'க்யூ' வரிசையில் நிற்கவைத்து இருபத்தைந்து ரூவிட்டு தீர்த்தவுடன், மீதி நெல்லை அரைக்க முடியாது என்று கூறி விடுகிறார்கள். இந்த மின்சார வெட்டைச் சீக்கிரம் எடுத்தாலன்றி, நெல் இருந்தும் போதிய அரிசிக்கு வழியில்லாமற் போகும்.

தஞ்சாவூர்
2—3—58 என். டி. எஸ். ராஜன்

## கி. மு. கர்ணம் சம்பளம்

நமது சர்க்கார் நிர்வாகத்தின் அஸ்திவாரம் போன்றவர்கள் கிராம முனிசீப்பும் கர்ணமும். சர்க்காரில் மிகவும் குறைந்த ஊதியம் பெறுபவர்களும் இவர்களேதான். பிரிட்டிஷார் ஆட்சி செலுத்திய காலத்திலே சம்பளம் குறைவாகத்தானே பெற்றார்கள் என்று சொல்லலாம். அக்காலத்தில் ஒரு பழமொழி சொல்வார்கள்: ''கணக்கனைப் பகைத்துக் காணி நிலம் இழந்தோம்'' என்பார்கள். தற்போது நாம் எல்லோரும் இத் நாட்டு மன்னரானவுடன் கி. மு. கர்ணங்களுக்கு மதிப்பு என்பதே இல்லாது போய் விட்டது. மாமூல் முறைகள் மறைந்து விட்டன. தற்போது கி. மு. வோ கர்ணமோ பொது ஜனங்களில் ஒருவர் சொல்லைத் தட்டினாலும் எம். எல். ஏ. முதல் கலெக்டர் வரை புகார் மனுக்கள் பறக்கின்றன. சட்டசபையில் எந்த அங்கத்தினரும் இவர்கள் குறைகளைப்பற்றி வாய் திறப்பதில்லை.

அம்பலசேரி
4—3—58 மு. மா. முத்தையா பிள்ளை

## தீர்வை அதிகம்

இராணிசேதுபுரம் கிராமம் இறுகலான கரிசல் புஞ்சை நிலங்கள் கொண்ட கிராமம். மேற்படி நிலங்கள் மழையினால் இலகுவில் நனையாது. நனைந்து விட்டாலோ, இலகுவில் உலராது. அந்த நிலங்களில் எதிர்பார்க்கும் அளவு பலன் கிடைப்பதே இல்லை. இதை அனுசரித்து, ஜமீன் காலந் தொட்டு 1365 பசலி வரை ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 1-7-2 என நிர்ணயம் செய்து தீர்வை வசூலித்து வந்துள்ளார்கள். சமீபத்தில் நடந்த சர்வே செட்டில்மெண்டில் அவை முதல்தரமான புஞ்சை நிலங்கள் என்று ஏக்கர் 1க்கு ரூ. 2-13 என 1366 பசலி முதற் கொண்டு நிர்ணயம் செய்திருக்கிறார்கள். ரூ. 1—7—2 தீர்வையைச் செலுத்த முடியாத நிலைமையில் அநேக நிலங்கள் சர்க்கார் பெயரால் பட்டா போடப்பட்டும் இருக்கின்றன. தற்சமயம் விதித்துள்ள ரூ. 2—13—0 விதம் ஏழை விவசாயிகளால் செலுத்த முடியாது. விவசாயிகள், நாளடைவில் கொஞ்சம்கொஞ்சமாகத்தீர்வை பாக்கிக்காகச் சர்க்காரிடம் தங்களது புஞ்சை நிலங்களை ஒப்படைக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும் என்பதில் ஐயமில்லை.

இராணிசேதுபுரம்
16—3—58 எம். எஸ். வீராசாமி

## பஸ் வசதி வேண்டும்

தென்னாற்காடு ஜில்லா, செஞ்சி தாலுக்காவில் இருக்கும் நல்லான்பிள்ளை பெற்றான் கிராமமக்களும், அதைச்சுற்றியிருக்கும் கிராம மக்களும் திருவருணை (திருவண்ணாமலை), செஞ்சி, விழுப்புரம் போன்ற நகரங்களுக்குச் செல்ல பஸ்வசதி இல்லாமல் தவிக்கிறார்கள். அவர்கள் மேற்கண்ட நகரங்களுக்குச் செல்ல வேண்டுமானால் நல்லான்பிள்ளை பெற்றான் கிராமத்தில் இருந்து ஐந்து மைல் நடந்து சென்று பஸ் ஏற வேண்டும். ஆகையால் விழுப்புரம், வேட்டவலம், நல்லான்பிள்ளை பெற்றான் வழியாகக் கீழ் பென்னாத்தூருக்கு ஒரு பஸ் சென்றால் மக்களுக்கு மிகவும் வசதியாக இருக்கும்.

ந. பி. பெற்றான்
சேசம் 18-3-58 கோ. கிருஷ்ணமூர்த்தி

# வாழ்க மணமக்கள்.



திரு வி. கே. ராமச்சந்தரின் புதல்வர் திரு ஆர். கிருஷ்ணமூர்த்திக்கும், சௌ. லலிதாவுக்கும் திருமணம் நடைபெற்றது.



திரு வி. முத்துகிருஷ்ணன் அவர்களின் புதல்வி சௌ. கமலாவைத் திரு கே. ஜி. ராதாகிருஷ்ணன் மணம் புரிந்தார்.



காளியாக்குடி மிராசுதார் திரு கே. என் சுப்பிரமணிய அய்யர் புதல்வி சௌ. விஜயலக்ஷ்மிக்கும் ஸ்ரீ ராமநாதனுக்கும் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது



உமையாள்புரம் அட்வகேட் திரு ஆர். வெங்கட்ராமய்யர் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும், திரு ஆர் வைத்தியநாதனுக்கும் விவாகம் விமரிசையாக நடந்தது.



தோட்டக்கார ரகுநாதனின் வளர்ப்புப் புதல்வி சௌ. கடாம்பிராஜேஸ்வரியைத் திரு பாலகிருஷ்ணன் மணந்தார்.



திரு மு. மகாலிங்கத்துக்கும், திரு டி. வி. ராகவனின் புதல்வி சௌ. மங்களத்துக்கும் திருச்சியில் திருமணம் நடந்தது.



# கல்கத்தா மகாநாடு

எஸ்.வி.எஸ்

## 2

### வயது குறைகிறது!

"ராஜாஜி! நாளுக்கு நாள் உங்களுக்கு வயது அதிகமாகி வருகிறதா? அல்லது குறைந்து வருகிறதா?"

இப்படிக் கேட்டவர் வங்கப் பிரதமர் ஸ்ரீ பி. ஸி. ராய்.

ராஜ பவனில் ராஜாஜியைப் பார்த்துக் குசலம் விசாரித்து விட்டுப் போக வந்த வங்கப் பிரதமர் மேற்கண்டவாறு சிரித்துக் கொண்டே கேட்டார். ராஜாஜியின் ஆட்சி மொழி இயக்கத்தை மனத்தில் கொண்டு தான் மேற்கண்டவாறு கேட்டார். இது காலையில் நடைபெற்றது.

அன்றைய தினம் மாலை மகாநாட்டில் ராஜாஜி பேசிய பேச்சைக் கேட்டவர்கள் ராஜாஜிக்கு இளமை திரும்பி விட்டது என்றுதான் உறுதியாக எண்ணியிருப்பார்கள். அந்த இளமை வங்க மக்கள் இம் மொழிப் பிரச்னை விஷயமாகக் காட்டிய ஊக்கத்தினாலும் உற்சாகத்தினாலும் ஏற்பட்டதேயன்றி வேறல்ல.

ராஜாஜி இம்முறை தமது பிரசங்கத்தை நேருஜியின் வார்த்தைகளை மேற்கோளாகக் காட்டி, ஆரம்பித்தார். "மொழிக்கு இரண்டு சக்திகள் உண்டு. அதாவது மொழியினால் மக்களை ஒன்றுபடுத்தி ஒற்றுமையை உண்டாக்கமுடியும். பிளவுபடுத்திப் பிரிவினையையும் உண்டாக்க முடியும். ஆகவே நம் நாட்டு மொழிப் பிரச்னை சம்பந்தமாக நாம் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இல்லையேல் தமது உற்சாகத்தின் காரணமாக நாட்டைச் சின்னாபின்னப்படுத்தி விடும்படி நேரலாம்!"

நேருஜி எத்தகைய ஆபத்து நேரும் என்று எச்சரிக்கை செய்தாரோ அந்த ஆபத்து வந்துவிட்டதனால்தான் நாம் இவ்வளவு தூரம் பேச வேண்டியதாக இருக்கிறது என்று ராஜாஜி குறிப்பிட்டார்.

### இதுமட்டும் அந்நியமா?

ஆங்கிலம் அந்நிய மொழி என்பதனால் தான் அதை ஆட்சி மொழியாக ஏற்க மறுக்கிறார்களே தவிர, அதற்குள்ள தகுதியையோ, உபயோகத்தையோ யாரும் குறைத்துச் சொல்வதில்லை. அதை எல்லாரும் ஓர் உலக மொழி என்று ஒப்புக் கொள்கிறார்கள்.

ஆங்கிலத்தை அந்நிய மொழி என்றால், தமிழ் நாட்டில் உள்ளவர்கள் "எங்களுக்கு இந்தியும் அந்நிய மொழி" என்கிறார்கள். ஆகவே, ஆங்கிலத்தை அந்நிய மொழி என்று சொல்வது பேதைமை. யார் எந்த மொழியைக் கற்றுக்கொண்டு விடுகிறார்களோ, அது அவர்களுடைய மொழி.

நாம் எத்தனையோ அந்நிய விஷயங்களை நமதாக்கிக் கொண்டுவிட்டோம். ரயில்கள், தந்திகள், விமானங்கள், ரேடியோக்கள் இவை யாவும் அந்நிய நாட்டிலிருந்து வந்தவைதானே? ஏன் இன்னும் எத்தனையோ விஷயங்களில் அந்நிய நாட்டையே நம்பியிருக்கிறோம் நமது திட்டங்கள் அந்நிய கடன் உதவியை எதிர்பார்த்திருக்கின்றன. இன்னும் நாம் காமன்வெல்த் உறவு வைத்துக் கொண்டிருக்கிறோம். ஏன் நமது ஜன நாயக ஆட்சி முறையே அந்நியம்தானே? இவைகளை யெல்லாம் ஏற்றுக்கொண்ட பிறகு ஆங்கிலத்தை மட்டும் அந்நிய மொழி என்று சொல்லி ஒதுக்குவது பேதைமை என்றார்.

நம் நாட்டில் வேரூன்றி விட்ட அந்நிய விஷயங்களை ஒவ்வொன்றாக விரல் விட்டு எண்ணிக் காட்டியபோது சபையினர் நல்ல சங்கீதக் கச்சேரியில், ஒரு சங்கதிக்கு மேல்

இன்னொரு சங்கதி விழுந்தால் மெய் புளகித்து எப்படி ஆகாகாரம் செய்வார்களோ, அப்படி ஆகாகாரம் செய்தார்கள்.

அன்றையக் கூட்டத்தில் ராஜாஜி மற்றொரு சந்தேகத்தையும் நீக்கினார். ''நான் ஆங்கிலத்தைத் தேசிய பாஷையாக்க வேண்டும் என்று சொல்லவில்லை. அவ்விஷயத்தில் இந்தி கூட நம் தேசிய பாஷை 'ஆக முடியா'து. ஆகவே, நான் கூறுவதெல்லாம் ஆங்கிலத்தை ஆட்சி மொழியாக்குங்கள் என்பதுதான்.''

அன்று சுமார் ஒரு மணி நேரத்துக்கு மேல் இந்த ஆட்சி மொழி சம்பந்தமாக ராஜாஜி உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார். அந்தப் பேச்சின் இடையிடையே சிரிப்பும் கைதட்டலும் மண்டபத்தை அதிர அடித்தன.

அன்றையப் பேச்சைக் கேட்ட பின்னர், இப்பிரச்னை விஷயமாக மிகுந்த தெளிவும், உற்சாகமும் வங்க மக்கள் பெற்றனர்.

## வங்கத்தின் சொரூபம்

மறுநாள்தான், அதாவது மார்ச் 9ம் தேதி தான் மகாநாடு சற்றுக் கடுமையாக இருந்தது. வங்க மக்களின் பூரண சொரூபத்தை அன்று தான் காண முடிந்தது.

அன்று காலை எட்டரை மணிக்கு மகாநாட்டுப் பிரதிநிதிகளின் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மாலை மகாநாட்டில் என்னென்ன தீர்மானங்கள் கொண்டு வர வேண்டும் என்று தீர்மானிப்பதற்காக அக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

ஆனால் இதில் விசேஷம் என்னவென்றால், மகாநாட்டுக்கு வந்திருந்த ஒவ்வொரு பிரதிநிதியும் ஒரு தீர்மானம் கொண்டு வந்திருந்தார். ஆனால் மகாநாட்டைச் சேர்ந்த வரவேற்புக் கமிட்டியாளர்கள் நீண்ட வாதவிவாதங்களுக்குப் பிறகு சுமார் பத்து தீர்மானங்கள் உருவாக்கிவைத்திருந்தார்கள். இந்தத் தீர்மானங்களைப் பிரதிநிதிகள் காதால் கேட்டு அங்கீகரிப்பதற்கு முன்பு அவரவர்கள் ஒவ்வொரு தீர்மானம் கொண்டு வந்து கொடுத்துத் தங்கள் தீர்மானங்களை வற்புறுத்த ஆரம்பித்து விட்டார்கள். இந்தத் தீர்மானங்களிலுள்ள எல்லா அம்சங்களும் ஏற்கெனவே தயாரிக்கப்பட்டுள்ள தீர்மானங்களில் பொதிந்து கிடக்கின்றன என்று அவர்களுக்கு உணர்த்துவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

இப்படி ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் தீர்மானத்தை வற்புறுத்த









கல்கத்தாவிலுள்ள தென்னிந்திய சங்கங்கள், ஸ்ரீமான் வி. எஸ். ரங்கசாமி அவர்கள் தலைமையில் ராஜாஜிக்கு அமோக வரவேற்பு அளித்த காட்சிகள் மேலேயுள்ளவை இங்கே காணலாம். இரண்டாவது படத்தில் நின்று கொண்டு பேசுபவர்தான் ஸ்ரீ வி. எஸ். ரங்கசாமி.

வேண்டும் என்கிற உற்சாகத்தில் தங்கள் நிலையை மறந்து விட்டார்கள்.

மகாநாட்டு வரவேற்புக் குழுவைச் சேர்ந்த ஸோமேந்திர நாத் டாகுர் அவர்கள் தாம் வெளியூரிலிருந்து வந்த பிரதிநிதி என்று எண்ணிக் கொண்டு தாம் கொண்டு வந்திருந்த தீர்மானத்தை வற்புறுத்த ஆரம்பித்து விட்டார். அவர் ஏதோ சாதாரணப் பிரதிநிதியைப்போல் தமது தீர்மானத்தை வற்புறுத்த ஆரம்பித்து விட்டார். பிறகு அவர் எங்கிருக்கிறார் என்பதை அவருக்கு உணர்த்தப்பட்ட பிறகுதான் அடங்கினார்.

இந்தக் காலைக் கூட்டத்திலிருந்து வங்காளிகள் எவ்வளவு உணர்ச்சி வாய்ந்தவர்கள் என்பது தெரிந்தது. இதைப்பற்றிமற்ற சகபத்திரிகை நிருபர்களிடம் பேசிக் கொண்டிருந்த போது, ''இது ரொம்ப சகஜம். வங்காளிகள் ஒன்றுமில்லாத விஷயத்துக்கு மண்டையைப் போட்டு உடைத்துக் கொள்வார்கள்! அவர்களுக்கு உணர்ச்சி வந்துவிட்டதானால் தாங்கள் என்ன செய்கிறோம் என்பதே தெரியாது!'' என்றார்கள்.

அன்று காலை எட்டரை மணிக்கு ஆரம்பித்த கூட்டம் ஒன்பதே முக்கால் ஆகியும் ஒரு இம்மி கூட முன்னேறவில்லை. ஆனால் ராஜாஜிக்குப் பத்து மணிக்கு மற்றொரு கூட்டமிருந்ததால், பிற்பகல் இரண்டரை மணிக்கு மீண்டும் கூடலாம் என்றார். எல்லாரும் சம்மதிக்கவே, காலைக் கூட்டம் கலைந்தது.

## ராஜாஜியின் உற்சாகம்

''இது என்ன இப்படி ஒவ்வொருவரும் 'காச் - மூச்' என்று கத்துகிறார்கள், இவர்களையெல்லாம் கட்டுப்படுத்தி ஒரு நிலைக்குக் கொண்டு வருவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிடும் போலிருக்கிறதே!'' என்று கூறினேன்.

ராஜாஜி சிரித்துக் கொண்டார்: ''தமிழ் நாட்டில் இப்படிப் பார்க்க முடியாது. அதனால் என்ன? நல்ல உணர்ச்சியுள்ள மக்கள்!'' என்றார். இவ்வளவு எதிர்ப்பைச் சமாளிப்பதில் ராஜாஜி துணிந்து விட்டார் என்பது அவரது பேச்சிலிருந்து தெரிந்தது. இவர்களையெல்லாம் சரிக்கட்ட முடியும் என்ற தைரியம் ராஜாஜியின் வார்த்தைகளில் தொனித்தது.

தமிழ் நாட்டுப் பிரதிநிதிகளும், வங்க மகாநாட்டு வரவேற்பாளர்களும் மகாநாடு நல்லபடியாக முடிய வேண்டுமே என்று கவலைப்பட்டு வந்தபோது, ராஜாஜி கவலையின்றி நிம்மதியாக இருந்தார். ராஜாஜி இம்மாதிரி எத்தனை கூட்டங்களைப் பார்த்திருக்க மாட்டார்! அந்த அனுபவங்களெல்லாம் அவருக்கு இன்று துணை புரியும் என்ற நம்பிக்கைதான் ராஜாஜியை அப்படி அலட்சியமாக இருக்கச் செய்தது.

## தமிழர்களின் அன்பு

கல்கத்தாவில் தமிழர்கள் ஏராளமாக வசிக்கிறார்கள். ராஜாஜி கல்கத்தா வருகிறார் என்று அறிந்த மாத்திரத்திலேயே கல்கத்தாவில் உள்ள தமிழ்ச் சங்கங்களைச் சேர்ந்தவர்கள் ராஜாஜியைத் தங்கள் தங்கள் சங்கங்களுக்கு வரவழைத்து உபசரிக்க வேண்டும் என்று துடிக்க ஆரம்பித்தனர். இருக்கும் இரண்டு நாட்களில் எத்தனை சங்கங்களுக்குச் சென்று போக முடியும்? ஆகவே, எல்லாச் சங்கங்களும் சேர்ந்து ஒரு வரவேற்பு அளித்தால் ராஜாஜி அதை ஏற்றுக் கொள்வதாகக் கூறியிருந்தார்.

பொதுவாக, கல்கத்தாவிலுள்ள தமிழ்ச் சங்கங்கள் ஒன்றுக்கொன்று அப்படியொன்றும் அன்னியோன்னியமாயிராதாம். எலியும் பூனையுமாக இருக்கும் என்று சொல்லிக் கொண்டார்கள். ஆனால் ராஜாஜிக்காக எல்லாச் சங்கங்களும் அன்று ஒன்று சேர்ந்தன. பாரதி தமிழ்ச் சங்கம், ஸவுத் இந்தியா கிளப், எக்ஸெல்ஸியர்ஸ் கிளப், ரஸிகரஞ்சனி சபா, தென் இந்திய பஜனை சமாஜம், தென் இந்திய இலக்கியக் கழகம், தமிழ் மாணவர் மன்றம், கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம் இத்தனையும் சேர்ந்து ராஜாஜிக்கு வரவேற்பு அளிக்கத் தீர்மானித்தன. ஒரு பெரியவர் விஜயம் செய்வதால் ஏற்படும் உயரிய பயனை அன்று கண்குளிரக் காண முடிந்தது. எல்லாச் சங்கக் காரியதரிசிகளும் ராஜாஜிக்கும் தமிழ் நாட்டிலிருந்து வந்திருந்த டாக்டர் ரத்தினசுவாமி போன்றவர்களுக்கும் வரவேற்புரை கூறி மலர்மாலை அணிவித்த காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

அதைவிடத் தமிழ் நாட்டை விட்டு ஆயிரம் மைல்களுக்கு அப்பால் தமிழ் நாட்டுப் பாணியில் சிங்காரமான கீற்றுக் கொட்டகையைப் பார்ப்பது என்பது எவ்வளவு ஆச்சரியமான விஷயம்! அந்தக் கொட்டகை முழுவதும் தமிழ் மக்கள் ஆண்களும் பெண்களும் ஆயிரக்கணக்கில் காலை வேளையில் குழுமியிருந்த காட்சி இனிய காட்சியாக விளங்கியது. தமிழ் நாட்டுக்கே உரிய வண்ண வண்ணப் பட்டுப் புடவைகள் சலசலக்க அந்தக் கொட்டகையைச் சரிபாதிப் பெண்கள் ஆக்கிரமித்திருந்தனர். அவர்கள் முகத்தில் எல்லாம் ராஜாஜியைத் தரிசிக்கப் போகிறோம். அவருடைய பொன்மொழிகளைக் கேட்கப் போகிறோம் என்ற தனியான குதூகலம் துள்ளி விளையாடியது.

இந்தக் கூட்டத்துக்கு ஸ்ரீமான் ஸி. எஸ். ரங்கசாமி தலைமை வகித்தார். அவர் தலைமையுரையில் மணிமணியாகச் சில விஷயங்களை எடுத்துச் சொன்னார்.

ராஜாஜி தேசத்துக்குச் செய்துள்ள பெரும் சேவைகளைப்பற்றியெல்லாம் குறிப்பிட்டார். அவற்றை விட அவரது தீர்க்க தரிசனமே பெரிது என்றார். ''பதினைந்தாண்டுகளுக்கு முன் பாகிஸ்தான் பற்றிச் சொன்னார். அன்று நடவாத காரியம் என்று எண்ணினர். ஆனால் அன்று ராஜாஜி சொன்னபடி நடந்து கொண்டிருந்தால் இவ்வளவு ரத்தக்களரியின்றிப் பாரதம் சுதந்திரம் பெற்றிருக்கும். அந்தச் சமயம்தான் நாம் அவர் சொல்லைக் கேட்கவில்லை என்றாலும், இந்தச் சமயம் மற்றொரு தீர்க்கதரிசனத்தோடு மற்றொரு எச்சரிக்கை செய்து வருகிறார். ஆங்கிலம் ஆட்சி மொழிப் பதவியிலிருந்து அகற்றப் பட்டால் ஏற்படக்கூடிய ஆபத்துக்களைப் பற்றி எச்சரிக்கை செய்கிறார். இந்தத் தடவையாகிலும் ராஜாஜியின் யோசனைப்படி அதிகா

ரத்தில் உள்ளவர்கள் கேட்டுப் பயனடைய வேண்டும்'' என்றார்.

இதைக் கூறியதும் சபையில் எழுந்த கர கோஷம் கொட்டகையைப் பிய்த்துக்கொண்டு மேலே சென்றது!

ஆனால், ராஜாஜிக்கு அங்கு கூடி யிருந்த தமிழ் மக்களின் பெருந்தொகையே மனத்தில் மேலோங்கி யிருந்தது போலும். தமிழ் நாட்டை விட்டு ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இத்தனை பேர்கள் இங்கு வந்திருக்கிறார்கள் என்ற எண்ணம்தான் அவர் உள்ளத்தில் அந்தக் கணம் நிலவியது. அந்த எண்ணத்தை அப்படியே ராஜாஜி எடுத்த எடுப்பிலேயே வெளியிட்டு விட்டார்.

''இத்தனை தமிழ் மக்கள் கல்கத்தாவில் இருப்பதைப் பார்த்து எனக்கு அச்சமாகக்கூட இருக்கிறது. இத்தனை பேர்களா தமிழ் நாட்டை விட்டு இங்கு வந்திருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. அதே சமயம் உங்களை யெல்லாம் ஏற்று அன்புடன் பாராட்டி வரும் வங்காளிகளையும் பாராட்ட வேண்டும். வங்காளிகளுக்கு நியாயமாக உரிய உணவை நீங்கள் பகிர்ந்துகொண்டு வருகிறீர்கள். கல்கத்தா ஏற்கெனவே ஜன நெருக்கமான நகரம். இதில் நீங்கள் வேறு வந்து சேர்ந்து கல்கத்தா வாசிகளுக்கு நியாயமாக உரிய இடத்தை அடைத்துக் கொள்ளுகிறீர்கள். பண விஷயத்திலும், மாதந்தோறும் சம்பளப் பட்டுவாடா மூலம் வங்காளிகளுக்குப் போய்ச் சேரவேண்டிய பணத்தில் ஒரு பகுதியை நீங்கள் பெற்று வருகிறீர்கள். இவற்றையெல்லாம் பார்க்கும்போது, வங்காளிகளின் அன்புக்கு நீங்கள் எவ்வளவு தூரம் பாத்திரர்களாகி யிருக்கிறீர்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. அவர்கள் விருந்தோம்பலைப் பாராட்டத் தோன்றுகிறது.''

மேற்கண்ட விஷயத்தை ராஜாஜி பேசி வந்த போது சபையிலிருந்த ஒரு வங்காளி, ''தமிழர்கள் எங்கள் உணவைப் பகிர்ந்து கொள்வதைப் பற்றி நாங்கள் சிறிதும் கவலைப்படவில்லை! மகிழ்ச்சியுடனேயே அளிக்கிறோம்!'' என்றார்.

வங்காளிகளின் பண்பாடு அதில் நன்கு புலனாகியது! ராஜாஜி அதைப் பாராட்டி விட்டு மேலும் தொடர்ந்தார்:

''இதைப் பார்க்கும்போது, பாரத நாடு முழுவதும் மக்கள் ஒரே மாதிரிதான் இருக்கிறார்கள் என்பதை அறிகிறோம். நம் வீட்டுக்கு விருந்தாளிகள் வந்து விட்டால், அவர்களுக்கு நாம் சாதாரணமாகச் சாப்பிடுவதை விட நல்ல சாப்பாடாகப் போடுகிறோம். நம் வீட்டில், நல்ல இடமாகப் பார்த்து அவர்கள் புழங்க ஒதுக்குகிறோம். இந்தப் பண்பாடு நம் நாட்டில் நீண்ட நாட்களாக இருந்து வருகிறது; இனியும் இருக்கும்!'' என்றார் ராஜாஜி.

மேற்கண்ட விஷயத்தைக் குறிப்பிட்டு விட்டு ராஜாஜி மக்கள் மனத்தில் மேலோங்கியிருக்கும் ஆட்சிமொழி விஷயத்திற்கு வந்தார். இவ்விஷயத்தைப் பற்றிக் குறிப்பிடும் போது ராஜாஜி எப்பொழுதும் விட வேகம் நிறைந்த குரலில் பேசினார்.

இந்தி ஆட்சி மொழியாவதில் உள்ள கஷ்டங்களை எடுத்துக் கூறினார். ''இந்தி போதிய அளவு வளராத பாஷை என்று நாம் சொல்லவில்லை. இந்தி மொழியாளர்களே ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் அதை ஆட்சி மொழியாகச் செய்வதற்குரிய தகுதி பெறுவதற்காக வெகு வேகமாக விஞ்ஞானச் சொற்களை இந்தியில் மொழி பெயர்க்க முயன்று வருகிறார்கள்.

''அத்துடன் மேனாட்டு விஞ்ஞான விஷயங்களை யெல்லாம் இந்தியில் மொழி பெயர்த்துப் படிக்க வேண்டியிருக்கும். இப்படிப் படித்து நாம் என்ன முன்னேற முடியும்?

''இந்தியில் வரக்கூடிய புஸ்தகங்கள் எல்லாம், நாம் அதில் பெய்து வைக்கும் விஷயங்கள் தவிர புதிதாக ஒன்றும் இராது. ஆனால் ஆங்கிலத்திலோ, நாளுக்கு நாள் புதிது புதிதாக விஞ்ஞான விஷயங்கள் வந்து கொண்டிருக்கின்றன! இந்த அணுகுண்டு யுகத்தில் நாம் இந்த விஞ்ஞான விஷயத்தை இந்தியில் படித்து என்ன பயன் அடைய முடியும்?

''இந்தியில் அணு விஞ்ஞானத்தைப் பற்றிப் படித்து இந்திய விஞ்ஞானி ஒரு அணுகுண்டு செய்யத் தொடங்கினால், அந்த குண்டு வெளியில் பறந்து வெடிப்பதற்குப் பதில் அவரது விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடத்திலேயே அது வெடித்துவிடும்!'' என்றார்.

அப்போது சபையில் எழுந்த ''அவுட்டுச் சிரிப்பு'' அணுகுண்டின் சத்தத்தையே நினைவூட்டியது!

''ஆங்கிலம் ஆட்சிமொழியாகவிருக்க ஒப்புக்கொண்டால் அது நம்மை ஆட்சி புரியத் தொடங்கிவிடும் என்று சிலர் பயப்படுகிறார்கள். ஆனால் ஆங்கிலம் நம்மை ஆளும் பாஷையாக இராது. அது நம்முடைய சேவகர்களில் பிரதான சேவகனாக இருக்கும். ராஜாவினுடைய பிரதான சேவகன் அலங்காரங்களுடன் விளங்கலாம். எனினும் அவன் சேவகன்தான். நல்லபடியாக ஊழியம் செய்யும் சேவகன்தான். அதற்குமேல் ஆங்கிலத்துக்கு அந்தஸ்து அளிக்க யாரும் விரும்பவில்லை!'' என்றார் ராஜாஜி. (தொடரும்)

பிப்ரவரி மாதச் சிறுகதைப் போட்டியில் நூறு ரூபாய் பரிசு பெற்ற

**'மஞ்சுளா'**

என்னும் கதை புத்தாண்டு மலரில் பிரசுரமாகிறது.

பரிசு பெற்றவர்: ஸ்ரீமதி ராஜேசுவரி பத்மநாபன் ''அநுத்தமா''

31, தொரப்பாடி ரோட், வேலூர்.

பல்  முளைக்கும்போது உண்டாகும் உபாதைகள்
குடல்வலி, வாயு, வயிற்றுக்கோளாறுகள்



# க்ரைமிக்ஸ்

க்ரைப் மிக்சர்

கொடுங்கள்

க்ரைமிக்ஸ் உங்கள் குழந்தையின் குடல்வலி, வாயு, இதர வயிற்றுக் கோளாறுகள் முதலியவைகளுக்கு துரித நிவாரணம் அளிக்கிறது. உங்கள் குழந்தையை ஆரோக்கியமாகவும், புன்சிரிப்புடனும் இருக்கச் செய்கிறது. குழந்தைக்கு க்ரைமிக்ஸ் கொடுங்கள்




# க்ரைமிக்ஸ்

க்ரைப் மிக்சர்

உங்கள் குழந்தையை
ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

# வீட்டுக்கு வந்த வரலக்ஷ்மி

காந்தன்



சிக்கலான கதைப் போக்கையும் பிரமிக்க வைக்கும் நிகழ்ச்சிகளையும் கொண்ட திரைக் கதையாயிருந்தால், 'ஊரை விட்டுச் சென்ற லக்ஷ்மியின் நிலை என்ன? தேடித் திரிந்த காசிநாதன் லக்ஷ்மியைக் கண்டு பிடித்தானு? மதிமயக்கமேற்பட்ட ரவியின் முடிவு என்ன? யாவையும் வெள்ளித் திரையில் காண்க' என்று குறிப்புக் கொடுப்பதில் அர்த்தம் இருக்கிறது. தூய கண்ணாடிப் பாத்திரத்தில் ஊற்றப்பட்ட நீரைப் போல், திரைக் கதையின் ஆரம்பமும் முடிவும் இப்போதெல்லாம் அனைவரும் ஏற்கனவே அறிந்ததாகத்தானே இருக்கின்றன?

ஒரு குழந்தை தன் கையில் ஓர் அதிசயப் பொருளை வைத்துக் கொண்டிருந்தால் அதைப் பார்த்த இன்னொரு குழந்தை அதே மாதிரி பொருளுக்கு ஆசைப்படுவது போல் இருக்கிறது நம் படாதிபதிகளின் நிலை.

ஒரு குறிப்பிட்ட அம்சத்தினுல் ஒரு படம் வெற்றியடைந்து விட்டால், அதே அம்சத்தை, அடுத்து வரும் படங்களிலெல்லாம் நிச்சயமாய்க் காணலாம். பொதுஜனங்கள் எல்லோரும் 'க்யூ'வில் நின்று கொண்டு, ''நாங்கள் இந்தக் காட்சியை ஏற்கனவே பார்த்தாகிவிட்டது'' என்று கதறுகிற வரையில் படாதிபதிகள் நிறுத்த மாட்டார்கள் என்று தோன்றுகிறது.

எதிலும் புதுமையைக் காண விரும்பும் காலம் இது. ஹோட்டல்களில் செய்யப்படும் இனிப்புப் பண்டங்களின் பெயர்களைக் கூட மாற்றுகிருர்கள். மோட்டார் கார்கள் வருஷா வருஷம் புதுப் புது மாடல்களில் வருகின்றன. தற்காலம் கட்டப்படும் வீடுகளில் தான் எத்தனை தினுசுகள். கைத்தறிப் புடவைகளில் எத்தனை புது மோஸ்தர்கள். ஆனுல் யார் செய்த பாவமோ தெரியவில்லை. நம் நாட்டில் எடுக்கப்பட்டு வெளிவரும் படங்கள் மாத்திரம் பழைய கதியிலேயே சென்று கொண்டிருப்பதன் காரணம் புலனுக வில்லை. பணத்தைக் கொட்டிப் படத்தை எடுக்கிருர்கள். அது பணங் கொடுத்துப் பார்ப்பவர்களுக்குத் திருப்தியை உண்டு பண்ண வேண்டு மல்லவா? அதையும் படாதிபதிகள் சிறிது யோசிக்க வேண்டும்.

மோட்சேஸ்வர் சித்ரா அளிக்கும் ''வீட்டுக்கு வந்த வரலக்ஷ்மி'' பார்த்தபோது தான் எனக்கு மேற்கூறிய சிந்தனைகள் தோன்றின.

இந்தப் படத்தின் பிரதான நடிகர், கதாநாயகன் என். டி. ராம ராவ்; அருமையாக நடிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்; பல படங்களில் மிகவும் நன்ருய் நடித்திருக்கிருர்.

என்னதான் சிறந்த வைரமானுலும் அதனுடைய சிறப்பு அதை நகையில் இழைக்கும் முறையில்தானே இருக்கிறது!

''வீட்டுக்கு வந்த வரலக்ஷ்மி'' சாதாரணமாக எல்லோரும் எதிர்பார்க்கும் முடிவைக் கொண்ட ஒரு சர்வ சாதாரணக் கதை. காதலும், கஷ்டமும், கடைசியில் கல்யாணமும் மிக மிகச் சாதாரணமான முறையில்தான் நிகழ்கின்றன.

தாயையும் தந்தையையும் இழந்து சிறுமி லக்ஷ்மி அநாதையாகி, சித்தப்பா வீட்டில் அவருடைய அன்பையும் சித்தியின் கொடுமையையும் துணையாகக் கொண்டு வளர்கிருள். லக்ஷ்மி படும் துன்பங்களை அறிந்த அவள் பாட்டனுர் அவளைத் தம்மிடம் அழைத்துச் சென்று பரிவோடும் பண்போடும் வளர்க்கிருர். அவர் இறந்ததும் லக்ஷ்மி மீண்டும் சித்தப்பா வீட்டுக்கே வந்து சேர்கிருள். சித்தப்பாவின் பெண் காத்தியாயினியைப் பெண் பார்க்க வந்தவர்கள் அவளது அசட்டுத்தனத்தைக் கண்டு வெறுத்து லக்ஷ்மியின் பண்பையும் பதவிசையும் கொண்டாடுகின்றனர். இதனுல் லக்ஷ்மி வீட்டைவிட்டு அப்பொழுதே வெளியேற்றப் படுகிருள்.

நல்ல தோற்றமும் மூக்கும் விழியும் கொண்ட ஜமுனு லக்ஷ்மியின் பாகத்தை ஏற்றிருக்கிருர். சித்தியின் வீட்டை விட்டு வெளியேறினதிலிருந்து திருப்பதி மலையில் ஒரு பாறையின் மீது ஏறி விழுந்து உயிர் துறக்க நினைத்தபோதும், பிறகு பணக்காரர் வீட்டுக் குழந்தையின் குறுக்கீட்டினுல் அந்த முயற்சி தடைப்பட்டு அந்தப் பணக்காரக் குடும்பத்துடன் ஒன்றிக் கொண்டபோதும், நந்த

வனத்தில் மலர் கொய்த காட்சிகளிலும் ஜமுனாவின் முகபாவங்களும் நடிப்பும் நன்றாயிருக்கின்றன. குறிப்பாக அவருடைய 'மேக்கப்', ஆடை ஆபரணங்கள், இழைய வாரப் படாத கூந்தல் ஆகியவை லக்ஷ்மியின் ஏழைமை நிலையை நன்கு எடுத்துக் காட்டப் போதுமானவையாயிருக்கின்றன. சித்தப்பா வீட்டில் அவள் இருந்த போது மிக மிகப் பொருத்தமாக அவ்வீட்டின் சூழ்நிலை கூட வறுமையை வாய் விட்டுக் கூறியது.

பாத்திரத்துக்கு ஏற்ற உடை, வீடு, சூழ்நிலை, வாழ்க்கை முறை இவைகளிலெல்லாம் கவனம் செலுத்தவில்லையென்றால் நடிக நடிகையர்கள் எவ்வளவு நன்றாக நடித்தாலும் படம் வெற்றியடைய முடியாது.

ஓர் அமெச்சூர் குழுவினர், முன்பு ஒரு சமயம் "ஸ்ரீ வள்ளி" நாடகம் நடத்தினர். அதில் வேலன்—வேடன்—விருத்தனாக நடித்தவர் மீசையை எடுக்க விரும்பவில்லை; அதனால் வேடனாக வந்தபோதும் விருத்தனாக வந்தபோதும் அவருக்குச் சிரமம் இருக்கவில்லை. ஆனால் வேலனாக வந்து தினைப் புனத்தில் வள்ளியம்மைக்கு ஆறுமுகங்களோடு காட்சியளித்தபோது ஒரு முகத்தில் மட்டும் மீசை இருந்து அவரைப் பழி வாங்கித் தீர்த்துவிட்டது! அன்று அந்த வேலனுக்குக் கிடைத்த ரஸிகர்களின் கரகோஷம் பிரமாதமாயிருந்தது!

ஜமுனாவின் சித்தப்பாவாக வரும் வி. எஸ். ஆர். ஆஞ்சனேயலுவின் நடிப்பு மிகவும் இயல்பாக அமைந்திருக்கிறது.

பணக்கார வீட்டுப் புதல்வன் ரவியாக வரும் என். டி. ராமராவ் இந்தப் படத்தின் கதாநாயகனாக வந்தும் அவருக்கு எடுத்த எடுப்பிலேயே ஜமுனாவைக் கண்டு மயக்கமுறுவதைத் தவிர வேறு வேலையேயில்லை.





அவருடைய நடிப்பு சோபிக்கும்படியான கட்டமே இந்தப் படத்தில் வரவில்லை. நந்த வனத்தில் மலர் கொய்யும் ஜமுனாவைக் கண்டு பாடுவதும் பின்தொடருவதும் மிகச் சாதாரணமாயிருக்கின்றன. ஆனால் அவரைக் கண்டதும் நடுக்கத்துடன் ஜமுனா மருண்டு ஓடுவது நன்றாயிருக்கிறது.

ரவியின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ள நினைத்த நாகரிகப் பெண்ணின் நடனம் பயங்கரம்; அந்த நடனம் அவசியமேயில்லை.

இதேமாதிரி இப் படத்தில் இன்னும் சில பயங்கரங்கள் வருகின்றன. அவற்றுள் ரேலங்கியின் கோணங்கிக் கூத்துக்களோடு சேர்ந்து வரும் ஈ. வி. சரோஜாவின் நடுத்தெரு நாட்டியம் ஒன்று. இரு முரடர்களின் இம்சைக்குப் பயந்து ஒரு பெண்மணி நடனமாடுவதாகக் காட்டப்படுகிறது. நடனக் கலையை இப்படியெல்லாம் இழித்துக் காட்ட அந்தக் கலை செய்த தவறுதான் என்ன? ஈ. வி. சரோஜாவின் நடனத்திறமை இப்படிப் பாழாவது மிகவும் வருந்தத் தக்கது. முன்னணிக்கு வரும் நடிகையான அவர் தரம் குறைந்த நடனங்களை ஆடாமல் இருப்பது கலைக்குச் செய்யும் சேவையாகும்.

இந்தப் படத்தின் பாடல்களைக் குயிலனும் லக்ஷ்மணதாஸும் இயற்றியிருக்கிறார்கள். வசனம் எழுதியவர் உதயகுமார். படத்தை டைரக்ட் செய்தவர் பி. என். ரெட்டி.

காத்தியாயினியாக வரும் சௌகார் ஜானகி மாணிக்கம் என்னும் போக்கிரியோடு ஓடி விடுவதாகவும் பிறகு அவள் தெருவில் நாட்டியமாடுவதாகவும் காட்டுவது மிகவும் பண்புக் குறைவானது. அந்த நடனமும் பயங்கர இனத்தைச் சேர்ந்ததுதான்!

இத்தகைய காட்சிகளையெல்லாம் விட்டொழித்து நம் நாட்டில் நல்ல முறையில் படம் எடுக்கும் காலம் வருமா?

அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

## கால்கேட் டூத் பிரஷ்

---



# நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.



எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.

# கால்கேட்

## பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்

# மாஸ்கோவில்


1
மாடியில் இருக்கும்போது
வானத்தில் பறந்து வந்த
செயற்கை கிரகத்தில்
தொத்திக்கொண்டு.....


2
...மாஸ்கோவில் குதித்தேன்.


இதென்ன! எல்லோரும் கூனிக்
குறுகிக் கொண்டு நடக்கிறார்
களே!
3
ஜனங்கள் நடமாடுவதைப்
பார்த்து வியந்து நிற்க...


4
...ஒரு செயற்கைக்கிரகம் என்னை மோதி வீழ்த்திச்
செல்கிறது!


5
விபத்தைத்தடுக்க நானும்
கூனிக்குறுகி நடக்கலானேன்!


செயற்கைக் கிரகங்கள் வானத்தில்
தங்கு தடையின்றிப் பறக்க வானளாவிய
மாளிகைகளைத் தரைமட்டமாகத்
தகர்த்துக்
கொண்டிருந்தார்கள்.
6






செயற்கைக் கிரகங்கள் தயாரிப்பது
குடிசைத் தொழிலா!
7
அங்குள்ள
குடிசைத்தொழிலைப்
பார்க்கச்சென்றேன்.
என்ன ஆச்சர்யம்!
அங்கு நான்
கண்ட காட்சி!...

# நான்!


ஸ்புட்னிக்
ஸ்புட்னிக்
8
தெருவில் கூடைகளில் போட்டுக் கொண்டு செயற்கைக்கிரகங்களை விற்கிறார்கள்!


செயற்கைக் கிரகங்களைப் பட்டங்களாகப் பறக்க-விடுகிறார்கள் குழந்தைகள்!
9


ஊரில் ஒரு நாயையும் காணோமே!
?
10
வியப்புடன் தெருவில் நடந்து செல்கையில் ஒரு நாய்க்கும்பல் என்னைப் பேட்டி கண்டது!


செயற்கைக் கிரகங்களில் எங்கள் இனத்-தாரை அனுப்பிச் சித்திரவதை செய்வதைத் தாங்கள் தடுத்து நிறுத்த வேண்டும்.
11


செயற்கைக்கிரகங்களில் நாய்களை அனுப்ப வேண்டாம்.
12
ரஷ்யத் தலைவர்களைச் சந்தித்து நாய்களின் சித்திரவதையைத் தடுக்க ஒரு மாற்றுத் திட்டம் சமர்ப்பித்தேன். என் ஜீவ காருண்யத்தை அவர்கள் வெகுவாகப் புகழ்ந்தார்கள்!


ஸ்புட்னிக் டோய்!
!
13
ரஷ்யாவிலிருந்து திரும்பிய நான் என் குழந்தைகளுக்கு எதைப் பரிசாக அளித்திருப்பேன்? சொல்லுங்கள் பார்க்கலாம்!

கரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது

ஹத்திபாயின்




ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்

எப்பொழுதும் பிரகாசத்துடன் நீடித்து உழைப்பவை!

* * *

ஹத்திபாய் துளஸிதாஸ் & ஸன்ஸ்

122, கள்ஸரா சால், பம்பாய் 2.

# பாவை விளக்கு

அத்தியாயம் 30

## "என்னைக் காதலிக்கிறாயா?"



உமா கொடுத்த படத்தை உற்றுப் பார்க்கப் பார்க்கத் தணிகாசலத்தின் கற்பனைகள் எங்கெல்லாமோ சென்றன. சௌந்தரத்தம்மாள் வீட்டுக் கூடத்தில் மாட்டியிருந்ததைப் போன்ற அதே முருகன் படம். முருகனுக்கு இரு புறங்களிலும் தெய்வயானையும் வள்ளியும் நின்று கொண்டிருந்தார்கள். — 'எதற்காக உமா இந்தப் படத்தை எனக்காக வாங்கி வந்து தருகிறாள்? அவளுடைய உள் நோக்கந்தான் என்ன?' என்று நினைத்தான்.



"'முருகன் அல்லது அழகு' என்ற திரு வி. க.வின் ஆராய்ச்சிநூலைப் படித்திருக்கிறாயா?" என்று கேட்டான் தணிகாசலம்.

"அழகு, இளமை, மணம், தெய்விகம் இவை போன்ற உயர்ந்த சக்திகளுக்கு ஒரு உருவம் கொடுத்து, பெயர் கொடுத்து, முழுமுதற் கடவுள் முருகனாக வழிபட்டு வந்திருக்கிறார்கள் நம் முன்னோர்கள்."

"முருகன் உயர்ந்தவர்தாம். ஆனால் பாவம்!..." என்று சிரித்தான் தணிகாசலம். குறும்புச் சிரிப்பு சிரித்துவிட்டு, "இரண்டு பெண்டாட்டிகளைக் கட்டிக் கொண்டு திண்டாடுகிறார்; இல்லாவிட்டால் இன்னும் கொஞ்சம் வீரதீரச் செயல்களை அவர் செய்திருக்கலாம்" என்றான்.

உமாவுக்குப் பாரதியின் முருகன் பாடல் நினைவுக்கு வந்தது.

"அறிவாகிய
கோயிலிலே,
அருளாகிய தாய்
மடிமேல்
முருகா! முருகா!
முருகா!"

இந்த வரிகளை நினைத்து விட்டு, அவனைக் கோபத்துடன் உருட்டி விழித்தாள். "உட்பொருளைத் தெரிந்து கொள்ளாமல் நீங்களும் நுனிப்புல் மேயாதீர்கள். இரண்டு பெண்களா அவர்கள்? ஒன்று வாழ்க்கை; மற்றொன்று லட்சியம். ஒன்று அறிவு; மற்றொன்று அருள். ஒன்று பொருள்; மற்றொன்று இன்பம். அறத்தின் திருவுருவான முருகன், தெய்வயானையைப் பொருளாகவும், வள்ளியை இன்பமாக

அகிலன்

வும் கொண்டு நமக்கு வழிகாட்டுகிறான்! வள்ளுவர் குறளையும் இந்தப் படத்தையும் ஒப்பிட்டுப் பாருங்கள்!''

''அருமை, அருமை, அருமை!'' என்று தன் பரிகாசத்தைத் தொடர்ந்தான் தணிகாசலம். ''முருகனுடைய காதல் கல்யாணத்துக்கு வள்ளுவரையா வக்காலத்து வாங்கச் சொல்கிறாய்? நான் இந்தப் புதிய ஆராய்ச்சிக்கு உனக்கு என்ன பரிசு கொடுப்பது!''

''விளையாட நான் வரவில்லை: படத்தை நீங்கள் என் பரிசாக எடுத்துக் கொண்டால் போதும்; எடுத்துக் கொண்டு எனக்கு விடுதலை தாருங்கள்'' என்று வெடுக்கென்று பேசினாள் உமா.

''விடுதலையா?—யார் உன்னை இப்போது கட்டிப் போட்டு வைத்திருக்கிறார்கள்?'' என்றான் தணிகாசலம்.

உமா அவன் எழுதுகிற நாற்காலியில் வந்து உட்கார்ந்தாள். தணிகாசலம் பிரம்பு நாற்காலியில் சாய்ந்தான். உமாவுக்கு அவன் கேட்ட கேள்விகள் எரிச்சலைக் கிளப்பின.

''நான் இப்போது கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்து கன்னி வாழ்க்கை வாழப் போகிறேன். என்னுடன் வேலை செய்யும் மேரி சார்லஸிடம் வெகு நாட்களாகவே இதைக் கேட்டு வந்தேன். நீங்கள் என்னை மறைமுகமாய் ஒதுக்கி



வைத்தீர்களல்லவா? உங்களோடு வேலை செய்ய வேண்டாமென்று சாக்குப் போக்குச் சொல்லி மழுப்பினீர்களல்லவா? அன்றிலிருந்தே உங்களிடம் எனக்கு நம்பிக்கை இல்லை.''

உமாவின் குரலில் இருந்த உறுதியைக் கண்ட தணிகாசலம் பதறிப் போய் விட்டான். அவளுடைய சொல்லும் செயலும் நேருக்கு மாறானவை என்பதும் அவனுக்கு விளங்காமல் இல்லை. 'கிறிஸ்துவ மதத்தில் சேரப் போகிறவள் முருகனின் பெருமைகளை விளக்குவானேன்? முருகன் படத்தைக் கொடுத்து விட்டுப் போவானேன்?'

உமா கூறினாள்: ''நீங்கள் என்னை வேண்டுமென்றே வெறுக்கத் தொடங்கி விட்டீர்கள். அன்றைக்குக் கூட நீங்கள் என்னை எழுதுவதற்குக் கூப்பிடவில்லை. அத்தையாக என்னை அழைத்துக்கொண்டு வந்து இங்கு தள்ளினார்கள். உங்களுக்கு என்னிடம் வேண்டா வெறுப்பு; சௌந்தரத்தம்மாளுக்கும் தீராக் கசப்பு.''

அதற்கு மேல் உமாவின் உள்ளம் உடைந்தே போய் விட்டது. அவள் பேச முடியாமல் கேவிக்கேவி அழுதாள். சௌந்தரத்தம்மாளின் கூரிய சொல்லம்புகள் அவளிடம் திரும்பவும் முளைத்தெழுந்தன போலும். ''ஐயோ, அம்மா!'' என்று கூவிக் கொண்டே தன் தாயாரின் படத்தின் மீது போய் மோதிக் கொண்டாள். 'என்னை எதற்காக அம்மா பெற்றெடுத்தாய்? நீ போகும் போது என்னையும் அழைத்துக் கொண்டு போயிருக்கக்கூடாதா? பூமிக்குப் பாரமாய் என்னை ஏன் விட்டுப் போனாய்?—என்னால் யாருக்கு என்ன நன்மை? அம்மா, நான் துரோகியாம்! நான் கௌரிக்குத் துரோகம் செய்வேனாம்! இவர் குழந்தைகளுக்குத் துரோகம் செய்வேனாம்! இவருக்கே துரோகம் செய்வேனாம்.'

படத்துக்குக் கீழே சுவரில் மோதி உமா தலையை உடைத்துக் கொள்வாள் போல் தோன்றியது. வெளியில் கதவுக்குப் பின்னால் கௌரியின் நிழலாடியதை உமாவோ தணிகாசலமோ கவனிக்கவில்லை.

தணிகாசலம் உமாவை அதட்டி அவளைத் தேற்றப் பார்த்தான்.

''யார் இப்படியெல்லாம் சொன்னது?-இந்த வீட்டில் யாராவது சொல்லியிருந்தால் நீ வருத்தப்படலாம். சௌந்தரத்தம்மாள் ஆயிரம்சொல்வார்கள்!''

''அவர்கள் நல்லவர்கள்!'' என்றாள் உமா. ''அவர்கள் மனத்தில் உள்ளதை




வெளிப்படையாய்ச் சொல்லுகிறீர்கள். நீங்கள் அதையே நினைக்கிறீர்கள். ஆனால் சொல்லுவதில்லை. நீங்கள் வீடு தேடி அலைந்த அலைச்சல்கள் எனக்குத் தெரியாதா? 'இந்த அறைக்குள்ளே நுழைய வேண்டாம்' என்று என்னிடம் சொல்வதற்குத் துணிவு இல்லாமல் என்னையும் என் உயிரையும் பிரிப்பது போல்,

தணிகாசலம் அவளிடம் சென்று, ''தயவுசெய்து உன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு நிதானமாய்ப் பேசு'' என்று மன்றாடினான்.

''நிதானத்துக்கு நேரமில்லை: நான் என்றைக்காவது உங்கள் குடும்பத்துக்குத் துரோகம் செய்வேனென்று நினைத்தால், இப்போதே உங்கள் கைகளால் என் கழுத்தை நெரித்துக் கொன்று விடுங்கள். இல்லா விட்டால் இப்போதே கிறிஸ்துவ மதத்தில் சேர அநுமதி கொடுங்கள். ஏசுநாதர் கருணை

உள்ளவர். மேரி மக்தலேனுவின் பாவத்தைக்கூட மன்னித்து அவளுக்குக் காட்சி கொடுத்தார். நான் கன்னியாய் வாழ்ந்து, கல்விப் பணியில் என்னை மறக்கப் பார்க்கிறேன்.''

''உன் வாய் சொல்வதை உன் மனம் சொல்ல வில்லையே, உமா?''

''என் மனத்தை நீங்கள் என்ன கண்டு விட்டீர்கள்?''

''வந்து உட்கார்'' என்று அவளிடம் நாற்காலியை இழுத்துப் போட்டுவிட்டு, ''நான், உனக்கே வெளியில் சொல்லத் தெரியாத சில பயங்கரமான உண்மைகளை இப்போது வெளியிடப் போகிறேன்: மனத்தைத் திடப்படுத்திக் கொள்'' என்றான். உமா பெட்டிப் பாம்புபோல் அருகில் வந்து அடங்கி ஒடுங்கி உட்கார்ந்தாள். என்ன சொல்லப் போகிறானே என்ற பயம் அவளுக்கு.



''உன் மனம் இந்த முருகன் படத்தில் உள்ள வள்ளியின் உருவோடு ஒன்றாய், என் எழுத்தறையில் சுற்றப் போகிறது. நீ அங்கே உன் உடலை வருத்திக்கொண்டு கன்னி வாழ்வு வாழப் போகிறாய். எனக்கு எந்த மதத்திடமும் வெறுப்பு இல்லை. மதங்களில் உயர்வு தாழ்வு கற்பித்துத் தம்பட்டமடிக்கிறவர்கள், அந்தத் தம்பட்டத்தைக் கழற்றி வைத்து விட்டு, எல்லா மதங்களும் கூறுகிற அடிப்படை உண்மைகளில் நூற்றில் ஒரு பகுதியைக் கடைப்பிடித்து வாழ்ந்தார்களானால், கட்டாயம் உயர்ந்த மனிதர்களாகி விடுவார்கள். அது வேறு விஷயம். ஆனால், இப்போதைக்கு உன் மனத்தில் ஏகநாதர் இல்லை; நான் இருக்கிறேன். நீ கன்னி வாழ்வு வாழப் போவதில்லை: கன்னி வேஷம்தான் போடப் போகிறாய்!''

மகுடியால் கட்டுண்ட நாகம் போல் உட்கார்ந்திருந்தவள், இதைக் கேட்டவுடன் தலையில் அடிபட்ட நாகம்போல் சீறினாள். ''நான் வாழ்ந்தாலென்ன? வேஷம் போட்டாலென்ன? உங்களுக்கு என்னால் தொந்தரவு இனிக் கிடையாதல்லவா?'' என்றாள்.

''ஒரு துன்பத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக இன்னொரு துன்பத்தை விலைக்கு வாங்கக் கூடாது.''

''அது என் இஷ்டம்.''

''கொஞ்சம் பொறு; நான் உன்னிடம் மனம் திறந்து, ஒளிவு மறைவில்லாமல் சில கேள்விகள் கேட்கப் போகிறேன். வருஷக் கணக்கில் நானும் நீயும் பழகி விட்டோம். என்னுடைய கேள்விகளுக்கு நீ நேரடியாய்ப் பதில் சொல்ல வேண்டும்.''

மனோதத்துவப் புத்தகங்களைப் படித்த பிறகு, தான் படித்த மனோ தத்துவங்களைப் பரீட்சை செய்து பார்ப்பதற்கு, தணிகாசலத்துக்குச் சரியான இடம் கிடைக்கவில்லை. உமாவை இப்போது ஒரு மனவியாதிக்காரியாகவும், தன்னை மனோதத்துவ வைத்திய நிபுணனாகவும் மதித்துக் கொண்டான். அவள்கொண்டு வந்து பரிசளித்த முருகன் படம் இப்போது கச்சிதமாக அவனை வியாதிக்காரியாக்கி விட்டது.

புத்தகப் பூச்சியான டாக்டர், நோயாளியான உமாவிடம் தமது 'ஆபரேஷனை'த் தொடங்கினார். கேள்விகள் கேட்டு மனத்திலுள்ள எண்ணங்களை வெளியில் கொண்டு வருவதுதானே, இந்த நூதன முறை மனோதத்துவ வைத்தியம்?

''நீ என்னைக் காதலிக்கிறாயா?'' என்று கேட்டார் டாக்டர்.

''மண்ணாங்கட்டி!'' என்று அவளிடமிருந்து பதில் வந்தது.

டாக்டர் அயர்ந்து போனார்.

''இந்த மண்ணாங்கட்டி என்ற சொல் என்னுடைய வழக்குச் சொல்; என்னிடமிருந்து அதை நீ எனக்குத் தெரியாமலே எடுத்துக் கொண்டிருக்கிறாய்; மண்ணாங்கட்டி போடாமல் எனக்குக் கதைகள் எழுத வராது.''

''எல்லாத் துன்பங்களுமே உங்களுக்குத் தெரியாமல் உங்களிடமிருந்து எனக்கு வந்ததுதான். நான் எதையும் எடுத்துக் கொள்ள வில்லை.''

''சரி! கேட்ட கேள்விக்குப் பதில் சொல். டாக்டரிடமும் வக்கீலிடமும் உண்மையைச் சொல்ல வேண்டும், தெரியுமா?'' என்று கேட்டான்.

''நீங்கள் எனக்கு டாக்டருமில்லை; என்னுடைய வக்கீலுமில்லை.''

நோயாளி தம்மிடம் முரட்டுத்தனம் பண்ணுவது இந்த வைத்தியருக்குப் பிடிக்கவில்லை. பற்களை நற நறவென்று கடித்து விட்டு, ''நீ என்னைக் காதலிக்கிறாயா?'' என்று திரும்பவும் கேட்டார்.

'கேள்வி கேட்கிற லட்சணமா இது? எந்தக் கேள்வியை எப்படிக் கேட்கிறார், பார்!' என்று நினைத்துக் கொண்டு, 'நான் பதில் சொல்ல முடியாது' என்று மறுக்கப் பார்த்தாள். அப்படி மறுத்தால், எங்கே அவனுக்கு இருக்கும் கோபத்தில், தன் பற்களையெல்லாம் உதிர்த்துக் கையில் கொடுத்து விடுவானோ என்று பயம்.

''வந்து...வந்து...''

''உம்! சொல்...''

''ஏற்கனவே ஒரு மனைவி, ஏற்கனவே குழந்தைகள், ஏற்கனவே ஒரு குடும்பம் உங்களுக்கு. உங்களை வேறு ஒருத்தி எப்படிக் காதலிக்க முடியும்?''

''முடியுமா, முடியாதா என்று நான் உன்னைக் கேட்கவில்லை. கேள்வியைப் புரிந்துகொண்டு பதில் சொல். மனித உணர்ச்சிகள் சம்பிரதாயங்கள் சட்டங்களுக்கு உட்பட்டவையல்ல.''



மேற்கொண்டு தணிகாசலம் மனித மூளைக்குள் உள்ள விசித்திரமான பகுதிகளின் விநோதமான தன்மைகளை அவளிடம் விஞ்ஞான ரீதியில் விளக்கப் புகுந்தான். ஏற்கனவே அவனுடைய கேள்வியால் ஓரளவு குழம்பியிருந்த அவள் மூளை இப்போது அவன் விளக்கத்தால் இன்னும் அதிகமாகக் குழம்பத் தொடங்கியது. மனோவைத்திய நிபுணர் தம்முடைய சிகிச்சை முறையால் நோயாளியைப் பைத்திய ஆஸ்பத்திரிக்கே அனுப்பி விடுவார் போல் தோன்றியது!

உமாவுக்கு எரிச்சல் தாங்க முடியவில்லை. தூரத்திலிருந்து மணத்தை நுகர வேண்டிய அடுக்கு மல்லிகையை, ஒருவன் இதழ் இதழாக வெந்நீரில் பிய்த்துப் போட்டு ஆராய்ச்சி செய்தால், அந்த மல்லிகைக்கு எப்படி இருக்கும்? உமா பொங்கி எழுந்தாள்.

''நான் உங்களைக் காதலித்தால் என்ன? காதலிக்காவிட்டால் என்ன? அதனால் உங்களுக்கென்ன நஷ்டம்? உங்களிடம் இருந்து நான் இதுவரை எதையும் எதிர்பார்த்திருக்கிறேனா? எதையும் கேட்டிருக்கிறேனா? என் உழைப்பைக் கொடுத்திருக்கிறேன்; என் அன்பைக் கொடுத்திருக்கிறேன்; என் பாசத்தைக் கொடுத்திருக்கிறேன். எதையும் நான் எடுத்துக் கொண்டதில்லையே!'' என்றாள்.

உமா அத்துடன் விடாமல் மேலே அடுக்கிக்கொண்டே போனாள். கௌரிக்கோ, குழந்தைகளுக்கோ, கல்யாணி அம்மாளுக்கோ தன்னால் என்ன தீங்கு விளைந்ததெனக் கேட்டாள். கனவிலும் தான் எதையும் அவனிடமிருந்து பெற்றுக் கொள்வதற்கு விரும்பவில்லை என்று கூறினாள்.

ஆனால், கடைசிவரையில் அவன் கேள்விக்கு அவள் பதிலளிக்கவில்லை.

சலித்துப்போன தணிகாசலம், தோல்வி மனப்பான்மையால் அவள் மீது சீறி விழுந்தான். ''நீ என் கேள்விக்குப் பதில் சொல்ல மாட்டாயல்லவா? இருந்து விட்டுப் போ! மதம் மாறுவதற்கு முன்னால் உன் மனத்தை மாற்றிக் கொள். உன் மனத்தில் இருக்கும் தணிகாசலத்தை அழிப்பதற்கு முன்னால், அங்கே உன்னால் கடவுளைக் கொண்டு வந்து வைக்க முடியாது. ஏகநாதரை நினைப்பதற்கு முன்னால் என்னை மறக்கக் கற்றுக் கொள்.''

''என்ன சொன்னீர்கள்?''

''ஆமாம்; ஒரு மாதமோ, இரண்டு மாதங்களோ, மூன்று மாதங்களோ, நீ எப்போதும் போல் இங்கு வீட்டிலேயே இரு. மேலே வந்தால்கூட என்னைப் பார்க்கவேண்டாம். ஏகநாதர் போதனைகளை நன்றாய்ப் படித்துப் பார். என்றைக்கு உன்னால் என்னை மறக்க முடிகிறதோ, அன்றைக்கு வந்து என்னிடம் விடைபெற்றுக் கொள். நான் உன்னை அப்போது தடுக்கவில்லை. முதலில் மறக்கப் பழகு! பிறகு புதிய பாதையில் போ!'' என்றான் தணிகாசலம்.

''இனி மேல் நான் உங்களைப் பார்க்கக் கூடாதா?''

''ஆமாம்.''

''உங்களிடம் பேசக் கூடாது?''

''ஆமாம்.''

''உங்கள் கதைகளைப் படிக்கலாமா?''

''கன்னி மாடங்களில் என் கதைகளைப் படிக்க அநுமதிப்பார்களா? அப்படியானால் படி; இல்லாவிட்டால் இப்போதே அதையும் நிறுத்தப் பழகிக்

கொள். கன்னி வாழ்க்கை வாழ்வது வெள்ளைத் துணிகளை உடுத்துக் கொள்வதல்ல. வெள்ளை மனத்தைப் புடம் போட்டு உருவாக்குவது. தில்லியிலிருந்து திரும்பும்போது, விந்திய மலைச் சாரல் காட்டில், பஞ்சவர்ணக்கிளியாய்ப் பறக்கவேண்டுமென்றுயே, நீயா இந்த முடிவுக்கு வந்தாய்?''

சோகச் சித்திரமாக உட்கார்ந்திருக்கும் உமா என்ற பேரழகியை அவன் தன் இரு கரங்களாலும் வாரித்தூக்கி, சன்னல் வழியே, வேப்பமரக்கிளையில் பறக்க விட நினைத்தான். கூண்டுப் புறுவாக அவன் மனம் துடித்த துடிப்பு அவனைச் சின்னுபின்னமாக்கியது. 'அவள் பஞ்சவர்ணக் கிளியாக மாற மாட்டாளா? அவளைத் தூக்கிப் பறக்கவிட மாட்டோமா? அவள் ஊரெங்கும் சுற்றி விட்டுத் தினந்தோறும் திரும்பி வர மாட்டாளா? ஏன் அவள் கிளியாய்ப் பிறக்காமல் பெண்ணுய்ப் பிறந்தாள்?'

''மாமா!''என்றுகூப்பிட்டாள் உமா.

தலைதூக்கிப்பார்த்தான் தணிகாசலம்.

''நான் உங்களிடம் ஒரு கேள்வி கேட்கலாமா?''

''என்ன கேள்வி?''

''நீங்கள் என்னிடம் கேட்டீர்களே, அதே கேள்வி!''

ரணசிகிச்சைக்காக வந்த நோயாளி, மருத்துவரின் கையிலிருக்கும் கத்தியைப் பிடுங்கிக் கொண்டு, அவரையே குத்திக் கிழித்தால் எப்படியிருக்கும்?... எப்படியிருக்கும்?

''போ! இங்கிருந்து போய் விடு! என்னை மறக்கும் வரையில் இங்கே திரும்பி வராதே!'' என்று அவன் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினுன் தணிகாசலம். ''தொலைந்து போ!'' என்று அவளை அறையை விட்டு வெளியேற்றினுன்.

உமாவுக்குப் பின்னுல் கௌரியும் ஒன்ருக ஓடியதை அவன் காணவில்லை. மாடிப்படியின் திருப்பத்தில் உமாவும் கௌரியும் ஒன்ருகக் கட்டிக்கொண்டு அழுதது அவனுக்குத் தெரியாது. இவ்வளவு நேரம் கௌரி அங்கே நின்றதை உமாகூட அறிய மாட்டாள்.

கற்பனைக் களஞ்சியங்களைத் திறந்து விடும் அந்த எழுத்தறை அப்போது தணிகாசலத்தை அநுதாபத்தோடு நோக்கியது. அநுபவமில்லாத வைத்தியர், தம்முடைய அரைகுறை வைத்தியத்தால், நோயாளியையே தீர்த்துக் கட்டிவிட்ட மருத்துவக்கூடம் அது. வைத்தியர் உபயோகப்படுத்திய ரண சிகிச்சைக் கத்தி இப்போது அவருக்கெதிராகத் திரும்பியது. 'வைத்தியரே! உம்முடைய மன நோயை முதலில் சொல்லும்! ஏன் இப்படி அவளை ஏமாற்றப் பார்க்கிறீர்?'

'நீ என்னைக் காதலிக்கிருயா?' என்று அவளிடம் கேட்ட கேள்விக்கு உமா பதிலளிக்க மறுத்து விட்டாள். மறுத்ததோடு நின்ருலும் பாதகமில்லை.'நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?' என்று கேட்காமல் கேட்டுவிட்டுச் சென்றிருக்கிருள். ஆதியும் அந்தமும் அற்ற கடவுளின் சிரத்தையும் பாதங்களையும் தேடும் பக்தனைப் போல், தணிகாசலம் அந்தக் கேள்விக்குத் தன்னிடமே பதில் தேடிக் கொண்டு தடுமாறினுன்: 'நான் உமாவைக் காதலிக்கிறேனு?'

## அத்தியாயம் 31

# கையடித்துக் கொடுத்தான்

உமா தில்லிக்குப் போயிருந்தபோது கூடத் தணிகாசலத்தை அவள் நினைவு இவ்வளவு அதிகமாக அரித்தெடுக்கவில்லை. ஒரே வீட்டில் இருந்துகொண்டு, ஒரே வாயில் வழியாகத் தெருவுக்குள் போவதும், வீட்டுக்குத் திரும்புவதுமாக நடந்து கொண்டு, முகத்துக்கு முகம் சந்திக்கும்போது கூடப் பேசமுடியாத நிலை ஒன்று ஏற்பட்டால் அவனுக்கு எப்படி யிருக்கும்? அவளுக்குத்தான் எப்படி யிருக்கும்?

தொழிற்சாலையில் அவன் சிறு சிறு தவறுகள் செய்யத் தலைப்பட்டான். இயந்திர உருளைகளும், பற்றி எரியும் உலை நெருப்பும், சம்மட்டிச் சத்தமும் அவனை ஒன்றுகூடிக் கேலி செய்தன. 'அவன் கேட்ட கேள்விக்கு நீ என்ன பதில் சொல்லப் போகிருய்? பதில் சொல்வதற்குப் பயந்துகொண்டு தானே நீ அவளுக்குச் சிறைத்தண்டனை கொடுத்திருக்கிருய்?' என்று அவனை எள்ளி நகையாடின.

அவனுல் முன்போல் மனத்தை ஒரு நிலையில் நிறுத்தி எழுதவும் முடியவில்லை. எழுதிக் கிழித்த காகிதங்களால் குப்பைக் கூடை நிரம்பியதே தவிர, பத்திரிகையின் பக்கங்கள் நிரம்பவில்லை. மேல் வீட்டுக்கு உமா வந்து போவது நிற்கக் காணேம். ஆனுல், எப்படி வந்தாள், எப்படிப் போனுள் என்பது தணிகாசலத்துக்குத் தெரியாது. தன்னைப் பார்க்கவோ தன்னிடம் பேசவோ கூடா




இலங்கையில் கிடைக்குமிடம்: **AVRA Ltd., Colombo**

ரேடியோ ஸிலோன் :—41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 லிருந்து 6-45 வரை

Motors

upto 200 H. P.






KIRLOSKAR
ELECTRIC CO.
LTD.
BANGALORE-3.

Sole Agents




MADRAS, BOMBAY,
CALCUTTA, NEW DELHI.

---

Telegrams : "KALIBRAND" Telephone : 108

# "காளீ-பிராண்ட்"

## எவர்சில்வர் பாத்திரங்கள்

○●○

தயாரிப்பவர்கள் :

## காளீ - பிராண்ட்

### கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம்

எல்லா இடங்களிலும் கிடைக்கும்

சாஸ்திர முறையில் விக்ரகங்கள் செய்வதில் புகழ் பெற்றவர்கள்

எந்தவிதமான விக்ரகங்களும் எந்த உலோகத்திலும் ஆர்டருக்குச் செய்து தரப்படும்

ஏஜெண்ட்ஸ் : "ருக்மணி குக்கர்"

தென்று தானே அவன் விதித்த கட்டளை? தனக்குத் தெரியாமல் குழந்தை கல்யாணியைத் தூக்கிக் கொண்டு அவள் கீழே சென்றால், அவன் எப்படித் தடுப்பது?

தணிகாசலத்திடம் வாயைத் திறந்து பேசுவதற்குக் கௌரி பயந்தாள். கல்யாணி அம்மாளும் பயந்தாள். பையன் பரமசிவமும் குழந்தை கல்யாணியுமே அங்கு பயமின்றித் திரிந்தார்கள்.

ஒரு வாரத்துக்குப் பின்பு தெருவில் சண்பகத்தை எதேச்சையாகச் சந்தித்தான் தணிகாசலம். அவளே முன் வந்து அவனிடம் பேச்சுக் கொடுத்தாள்.

''உங்களுக்குள் இப்போது பேச்சு வார்த்தை கிடையாது போலிருக்கிறதே? சௌந்தரத்தம்மாள் சொன்னார்கள்'' என்றாள்.

விட்டுக் கொடுக்காமல், ''அப்படி ஒன்றுமில்லை; பேசாமல் என்ன?'' என்றான் தணிகாசலம்.

''உங்களுக்குச் சேதி தெரியுமோ? எப்படியும் இந்தச் சமயத்தில் மூச்சோடு மூச்சாய் உமாவுக்கு ஒரு முடிச்சுப் போடுவதென்று நாங்கள் தீர்மானித்து விட்டோம். சௌந்தரத்தம்மாள் பையன் வீட்டுக்குப் போயிருக்கிறார்கள். எதற்கும் உங்களைத்தான் நம்பிக் கொண்டிருக்கிறோம். நீங்கள் இப்படியே இன்னும் ஒரு பத்துப் பதினைந்து நாட்கள் கண்டிப்பாக அவளிடம் நடந்து கொண்டு விட்டால் போதும். அவள் இடுப்பு முறிந்து, வருவதை நிறுத்தி விடுவாள்.''

உமாவின் இடுப்பு முறிவதில் சண்பகத்துக்கு ஏற்படும் ஆனந்தத்தை எண்ணிப் பார்த்தான் தணிகாசலம். அந்த ஆனந்தம் இல்லாவிட்டால், அவள் இப்படி வழியில் நின்று பேசியிருக்க மாட்டாள் அல்லவா?

மறுநாள் மாலையில் தணிகாசலம் வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பினான். அவன் உள்ளே நுழையும்போது, முன்பு அவனுக்கு வைத்தியம் செய்த டாக்டரும் பையன் பாலுவும் ஒன்றாக எதிர்ப்பட்டார்கள். தயங்கி நின்றான் தணிகாசலம். ''காய்ச்சல் அதிகமாக இருக்கிறது; பையனிடம் மருந்து கொடுத்து அனுப்புகிறேன்'' என்று, அவனோடு தம்முடைய காரில் ஏறிக் கொண்டு விட்டார் டாக்டர்.

யாருக்குக் காய்ச்சல்? கீழ் வீட்டுக்குள் அடி எடுத்து வைத்த தணிகாசலம், மறு கணத்தில் தன் யோசனையை மாற்றிக் கொண்டு, மேலே வந்தான். நிதானமாகக் குழாயடியில் முகம் கழுவிக் கொண்டு அடுக்களைக்குச் சென்றான். கௌரி மௌனமாகக் காப்பியை எடுத்துக் கொண்டு, ''இப்படிக் கொஞ்சம் வாருங்கள்'' என்று முன்கூடத்துக்கு அவனை அழைத்து வந்தாள். கல்யாணி அம்மாள் கஞ்சி வைப்பதற்காக அரிசியை இயந்திரத்தில் மாவாக்கிக்கொண்டிருந்தாள்.

''பள்ளிக்கூடத்துக்குப் போன உமாவைப் பாதியில் கொண்டு வந்து விட்டார்கள். நேற்றிலிருந்தே அவளுக்கு ஜுரமாம். யாரிடமும் சொல்லவில்லை. இப்போது உடம்பு நெருப்பாய்ச் சுடுகிறது; நூற்றுநாலு டிகிரி என்று டாக்டர் சொன்னார்.''

சிலையாய் நின்றான் தணிகாசலம்.

''நான் சொல்லுகிறேனே என்று கோபித்துக் கொள்ளாதீர்கள். எல்லாம் உங்களால் வந்த கோளாறுதான். நீங்கள் அவளைக் கழுத்தைப் பிடித்துத் தள்ளியதை நான் பார்த்துக் கொண்டுதான் இருந்தேன்.''



இதற்கும் தணிகாசலம் பேசவில்லை. காப்பியைக் குடித்து விட்டுத் தம்ளரை நீட்டினான்.

''உங்களுக்கு ஈவு இரக்கமிருந்தால் இப்போதாவது அவளைப் போய்ப் பாருங்கள். அவளுக்கு ஏதாவது நேர்ந்தால் அந்தப் பாவம் நம்மைச் சும்மா விடாது. உங்களைப் பற்றிப் பேசினாலே அவள் பயந்து சாகிறாள்.''

''நான் என்ன, பேயா பிசாசா பயப்படுவதற்கு?''

''உங்களுக்குக் கோபம் வந்து விட்டால் பேய் பிசாசு கூடப் பயப்படும். உமா, பாவம், எந்த மூலைக்கு? 'மாமாவிடம் எனக்குக் காய்ச்சலென்று சொல்



**எழும்பூர் ஸ்ரீ வேதசபையின் ஏழாவது வருஷப் பூர்த்தி விழாவை, கேரள கவர்னர் டாக்டர் பி. ராமகிருஷ்ணராவ் சமீபத்தில் துவக்கி வைத்தார். அவ்விழாவின்போது ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சார்ய சுவாமிகள் வேத சபைக்கு விஜயம் செய்து ஆசி கூறினார்கள். ஆச்சார்ய சுவாமிகளின் பூஜைக்காக மேற்படி சபையின் சார்பில் இரண்டு வெள்ளிக் குத்துவிளக்குகள் சமர்ப்பணம் செய்யப்பட்டன.**

லாதே: அவருக்குத் தெரிய வேண்டாம்' என்று சொன்னாள். சொல்லும்போதே அவள் எப்படி நடுங்கினாள் தெரியுமா?''

தணிகாசலம் கௌரியை அனுப்பி விட்டு நிலைக்கண்ணாடியில் தன் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டான். அது பார்த்தவர் சஞ்சலப்படும்படி அவ்வளவு கவர்ச்சிகரமாகவும் இல்லை: பார்த்தவர் மருளும்படி அவ்வளவு பயங்கரமாகவும் இல்லை. உமா எதற்காகப் பயப்படுகிறாள்?

நோய்ப் படுக்கையில் கிடப்பவளை மேலும் பயமுறுத்தக் கூடாதென்பதற்காகத் தன்னை எவ்வளவு அழகு செய்து கொள்ளமுடியுமோ அவ்வளவும் செய்து கொண்டான். அந்த அடங்காத நெற்றி மயிரை ஒழுங்காக வாரி விட்டான். அவள் என்னதான் கோபமூட்டினாலும், தான் சிரித்துக் கொண்டே பேசவேண்டுமென்று திட்டமிட்டான். கண்ணாடியில் அவன் புன்னகை செய்து பார்த்தபோது அவன் முகம் பயங்கரமாக இல்லை.

உமா தோட்டத்தை அடுத்த பின்புறத்து அறையில், தேக்குமரக் கட்டிலில், மெத்தையில் படுத்திருந்தாள். சன்னல்கள் திறந்திருந்தன. தலைமாட்டில், மேசைமேல் விசிறி சுழன்றுகொண்டிருந்தது. சன்னலுக்குப் பின், காலையில் மலர்ந்து உதிரப் போகும் பவள மல்லிகை, தன் மொட்டுக்களைச் சுமந்து முனகிய வண்ணம் காட்சி கொடுத்தது.

மேற்கு வானக் கதிரொளி அவளது ஆரஞ்சு வர்ணப் புடவையில் தனது மஞ்சள் நிறத்தையும் ஒன்று சேர்க்கப் பார்த்தது. விசிறிக் காற்றில் படபடக்கும் அவளது சேலைத் தலைப்பையும் நெற்றியில் துடிதுடிக்கும் கூந்தலையும் நோக்கியபடி, அருகில் நாற்காலியில் அமர்ந்தான் தணிகாசலம். உமாவின் கண்கள் மூடியிருந்தன. ஏனோ, அவள் முகத்தை அந்த நிலையில் கண்டபோது, அவனுக்குக்கோயிலின் உட்பிராகாரத்தில் விளக்கேந்தி நிற்கும் நாச்சியாரின் நினைவு வந்தது. அந்தப் பாவையின் முகத்துக்குள்ளிருந்து ஓர் விளக்கொளி படர்வதைக் கண்டான்.

''உமா!'' என்று மெல்ல அழைத்தான் தணிகாசலம்.

உமாவின் கண்கள் திறந்தன. தணிகாசலம் சிரிக்க முயன்றான்.

விழித்த விழிகளில் பீதி நிரம்பியிருந்தது. புலியைக் கண்டுவிட்ட மானின் விழிகள் அவை.

''உமா! ஏன் பயப்படுகிறாய்?''

கண்களைத் திரும்பவும் இறுக்கி மூடிக் கொண்டாள் உமா.

''உமா!''

அவள் குப்புறத் திரும்பிப் படுத்துக் கொண்டு தலையணையில் தன் முகத்தைப் புதைத்தாள். அவனை ஏறிட்டுப் பார்க்கவே இல்லை. தணிகாசலம் எதிரில் கண்ணாடி அலமாரியில் தன் உருவத்தை நோக்கினான். அதில் அவன் பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. பேசாமலே அங்கு உட்கார்ந்து கொண்டிருந்தான். மேசையில் காய்ச்சலை அளக்கும் கருவி, 'தர்மாமீட்டர்' இருந்தது.

''என்னை மன்னித்துக்கொள், உமா! இனி நான் உன்னைத் திட்டவே மாட்டேன்'' என்றான் தணிகாசலம்.

அதற்கும் அவள் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை.

தணிகாசலத்தின் கண்கள் கலங்கின. ''எங்கே, கொஞ்சம் திரும்பி உன் முகத்தைக் காட்டு. காய்ச்சல் எவ்வளவென்று பார்த்துவிட்டுப்போகிறேன்.''

''என் உடம்போடு போகும் காய்ச்சல் இது'' என்று திரும்பாமலே பதிலளித்தாள் உமா. ''நீங்கள் எனக்கு வைத்தியம் செய்ய வரவேண்டாம்; நீங்கள் எனக்கு டாக்டரல்ல!''

அவளுடைய பிடிவாதம் முரட்டுத்தனமாக இருந்தது. கால்மணிப் பொழுது காத்திருந்தபின், ''சரி, நான் போய் வருகிறேன்; என்னைக் கண்டு நீ பயப்படாமல் இருந்தால் போதும்'' என்று சொல்லி இடத்தை விட்டு எழுந்தான்.

கையில் எடுத்த தர்மாமீட்டரை அதன் இடத்தில் வைத்தான். மெல்ல அங்கிருந்து நடந்தான்.

''மாமா!''

தணிகாசலம் திடுக்கிட்டுத் திரும்பினன். பழைய இடத்தில் வந்து உட்கார்ந்தான். நான்கு கண்கள் கெண்டை மீன்களாக நீரில் மிதந்தன.

தர்மாமீட்டரை அவளிடம் கொண்டு சென்றபோது அவள் தன் வாயைத் திறந்தாள். எடுத்துப் பார்த்தபோது நூற்று நாலைத் தாண்டி, சிறிதளவு அதிகமாகவே இருந்தது. அவன் வலது கரம் நடுங்கியது. நூற்று ஐந்து டிகிரிக் காய்ச்சலில் தம் கண்களை மூடிய தகப்பனார் பரமசிவத்தை நினைத்துக் கொண்டான்.



அந்த வலது கரத்தில் எதிர்பாராத விதமாக மின்சாரம் பாய்ந்தது. நெருப்புத் துண்டுகள் போல் இரண்டு பெண் கரங்கள் அதனைப் பற்றிக் கொண்டன. அவள் அந்தக் காய்ச்சல்கருவியை நழுவ விடவில்லை. தன் கரத்தை விடுவித்துக் கொள்ளவும் இல்லை.

''சாகப்போகும் என்னுடைய கடைசி ஆசை இது தான்'' என்று சொல்லி, அவன் கரத்தைத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள் உமா. ''வேறு எந்த ஆசையும் எனக்கு இல்லை. இந்த முரட்டுக் கரத்தின் மேன்மை என் ஒருத்திக்குத்தான் தெரியும்.''

'இதேபோல் கௌரியும் ஒருநாள் பொன் வயலில் செய்தாளே?' என்று எண்ணினன் தணிகாசலம். 'கௌரியையும் இவளையும் ஒரே அச்சில் வார்த்திருக்கிறாரா, பிரமன்?'

''ஒருகாலும் நீ சாகமாட்டாய். நாளைக்குப் பொழுது விடிவதற்குள் நீ கலகலவென்று எழுந்திருக்கப் போகிறாய், பார்!''

''என்னை இதற்காக ஓங்கி அறையாமல் இருந்தீர்களே, ஒருவேளை இனிமேல் பிழைத்தாலும் பிழைத்து விடுவேன்.''

கலங்கிய கண்கள் நான்கும் சிரித்தன.

ஒருபுறமாய்ச் சாய்ந்து படுத்துக் கொண்டு, உமா தணிகாசலத்திடம், சண்பகம் கூறிய அதே செய்திகளைக் கூறினாள். ''சண்பகமும் அத்தையும் கூடிக் கூடிப் பேசினார்கள். அப்பாவை வரச் சொல்லிக் கடிதம் எழுதியிருப்பார்கள்போல் தெரிகிறது. என்னிடம் இருவரும் குழைந்து குழைந்து பேசினார்கள். அத்தையம்மாள் அந்தக் கலெக்டர் வீட்டை முற்றுகை போடப் போயிருக்கிறார்கள். கல்யாணத்தை நடத்திவைத்தால் அத்தைக்குத் தனியாக மேல் வரும்படி கிடைத்தாலும் கிடைக்கும்!''

நிதானமாகவே அவளும் பேசினாள். நிதானமாகவே அவனும் அதை உற்றுக் கேட்டிருந்தான்.

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டாள் உமா.

''நான் என்ன சொல்ல முடியும்?''

''என்னிடம் பேசிப் பலிக்கவில்லை என்று எல்லோரும் உங்களிடம் வரப் போகிறார்கள். அப்பாவே நேரில் வந்து உங்களைக் கெஞ்சப்போகிறார். உங்கள் காலில் அப்பாவை விழ வைக்கக் கூடச் சௌந்தரத்தம்மாள் தயங்க மாட்டார்கள்.''

தன் காதுகளைப் பொத்திக் கொண்டான் தணிகாசலம். 'பேராசிரியர் வந்து என்னிடம் கெஞ்சுவதா?'

''நான் பிழைத்துக் கொண்டால் இவ்வளவும் நடக்கும்.''

தணிகாசலம் பலவிதமாகத் தன் மனத்தை அலட்டிக் கொண்டு, இறுதியாக ஒரு தெளிவுக்கு வந்தான். ''உமா! உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீ வருத்தப்படக் கூடாது. கன்னி வாழ்க்கையைவிட, கிறிஸ்துவ மதத்தில் நீ சேர்வதைவிட, ரவியைக் கல்யாணம் செய்து கொள்வது எவ்வளவோ மேலானது.''

இந்தப் பேச்சுக்குப் பயங்கரமான பலன் கிடைத்தது.

உமா அவனை எரித்து விடுவதுபோல் விழித்தாள். தலையணையை எடுத்து வீசி எறிந்தாள். பக்கத்தில் இருந்த பாட்டில் உருண்டது. ''என்ன சொன்னீர்கள்?'' என்று கேட்டாள்.

அவள் குரல் அவனை மயிர்க்கூச்செறிய வைத்தது.

''இனிமேல் சொல்லவில்லை; என்னை மன்னித்து விடு.'' தலையணையை மீண்டும் எடுத்துவைத்து, ''படுத்துக்கொள்,

உமா ; உனக்குப் பிடிக்கவில்லை என்றால் வேண்டாம்'' என்றான்.

பயம் இப்போது தணிகாசலத்துக்குத்தான். அவளைத் தூங்கச் சொல்லிவிட்டு விரைவில் அந்த அறையை விட்டு நழுவப் பார்த்தான். தன்னுடைய வாழ்க்கையில் இதுபோன்ற ஒரு உயிர்ப் பிராணியுடன் பழக நேரும் என்று அவன் கனவே காணவில்லை.

தன் கையை நீட்டினாள் உமா. அதிகாரத் தொனியில், ''என்னை நீங்கள் இனிமேல் இப்படித் துன்புறுத்தவில்லை என்று கையடித்துக் கொடுங்கள்'' என்றாள்.

தயங்கினான் தணிகாசலம்.

''என் முகத்துக்கு எதிரில் நீங்கள் இனிமேல் கல்யாணப் பேச்சை, தனியாகவோ, அவர்களுடன் சேர்ந்து கொண்டோ எடுக்கக் கூடாது.''

''சரி'' என்று மென்று விழுங்கினான்.

''என்ன, சரி? இதைப் போல் ஆயிரம் தடவை சொல்லி விட்டீர்கள். உம்! கையடித்துக் கொடுங்கள். அடுத்த முறை உங்கள் வாயால் இந்தப் பேச்சைக் கேட்டால், என்னைக் கொன்ற பாவம் உங்களுக்கு.''

தணிகாசலம் கையடித்துக் கொடுத்தான். அடித்த கையைப் பிடித்துக் கொண்டு அவள் ஒருவிநாடி விடவில்லை.

''அவர்கள் நினைப்பதற்குத் தகுந்தாற் போல் நீங்களும் மாறினால் என் கதி என்ன? இப்போது நான் பேசியது விளையாட்டுப் பேச்சில்லை; வினைப் பேச்சு. இந்த உலகமே திரண்டுவந்து என்னைக் குத்திக் கிழித்தாலும் பொறுத்துக் கொள்வேன். பயப்பட மாட்டேன். நீங்கள் மட்டும் என்னைப் பேச்சால் வதைக்காதீர்கள்.''

''நீ யாருக்கும் பயப்பட வேண்டாம்; கடவுளுக்குப் பயந்து நடந்து கொண்டால் போதும்.''

''என் மாமா, தங்கமான மாமா!'', என்று சொல்லிச் சிரித்தாள் உமா.

ஐந்து நிமிஷத்துக்கு முன்பு தோன்றிய வெறி மறைந்து போய் எப்படி இவளால் சிரிக்க முடிகிறது?

''பாருங்களேன்! நான் கட்டாயம் பிழைத்துக் கொள்வேன்.''

ஒரு கையில் கஞ்சியும், மறு கரத்தில் குழந்தையுமாக வந்து சேர்ந்தாள் கௌரி. கஞ்சியை வாங்கிக் குடித்தாள் உமா. பிறகு குழந்தை கல்யாணியை மார்பில் போட்டுக்கொண்டு, ''என் காய்ச்சல் உனக்கு ஒட்டிக் கொள்ளாது; பயப்படாதே!'' என்று அதன் கன்னத்தைக் கிள்ளி விளையாடினாள்.

சௌந்தரத்தம்மாள் தன் கையால் தொட்டால் கூடக் கதறி அழும் அந்தக் குழந்தை, உமா கிள்ளியதைப் பொறுத்துக் கொண்டு மழலையைக் கொட்டியது. அவள் சொல்லிக் கொடுத்த வார்த்தைகளைத் திருப்பிக் கூறியது. ''உன் பெண்ணை உமா நன்றாக மயக்கி விட்டாள்'' என்று கௌரியிடம் கூறினான் தணிகாசலம்.

''எல்லோரையுந்தான் உமா மயக்கி விட்டாள். உங்களுடைய பத்து நாள் கோபம் இப்போது போன இடம் தெரியவில்லையே!''

பாலு மருந்தோடு வந்த பிறகு, அவளுக்கு மருந்தைக் கொடுத்து விட்டு, மூவரும் வெளியேறினர். மாடியில் போய் நின்ற தணிகாசலம் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டுத் தெருவைப் பார்த்தான். வாடகைக் காரிலிருந்து முதலில் சௌந்தரத்தம்மாளும் அடுத்தாற்போல் பேராசிரியர் சந்திரசேகரனும் இறங்கினார்கள்.

பேராசிரியரை அவன் எதிர்பார்க்கவில்லை. ஓடிப் போய் அவரை வரவேற்க வேண்டுமென்று தோன்றியது அவனுக்கு. ஆனால் சௌந்தரத்தம்மாளும் அவரும் ஒன்றாக வந்ததால், வியப்பை விடத் திகைப்பே அவனிடம் மேலோங்கி நின்றது. (தொடரும்)

பொருளாதாரமும் பொதுமக்களும் 20

# நமது லட்சியம்

கு. சந்தானம்

பசியால் வாடி வருந்துவோனுக்குக் கடவுள் அன்னமாகவே அவதரிக்க வேண்டும் என்று காந்தியடிகள் கூறினார். வறுமையில் ஆழ்ந்திருக்கும் பாரத மக்கள் பொருளாதார முன்னேற்றத்தையே தமது முக்கிய அலுவலாக எண்ணுவது நியாயமே. ஆனால் அம் முன்னேற்றம் விருப்பத்தினாலோ, மந்திரத்தாலோ ஏற்படாது.

சுதந்திரம் பெற்றுப் பத்து வருஷங்களுக்குள் பெரிய காரியங்களை மத்திய ராஜ்ய அரசாங்கத்தாரும், இந்திய முதலாளிகளும் பொது மக்களின் ஒத்துழைப்புடன் சாதித்திருக்கின்றனர். பின் கண்ட 29 நீர்ப்பாசன, மின்சார அணைகளும் அவைகளைச் சேர்ந்த இதர வேலைகளும் இக் காலத்தில் நடைபெற்றிருப்பதை நினைந்து பாரத மக்கள் பெருமை கொள்ளப் பாத்திய முண்டு.

1. துங்கபத்ரா: பெல்லாரி ஜில்லா, மைசூர்ப் பிரதேசம், உயரம் 160 அடி; நீளம் 7942 அடி; பாசனம் 8·3 லக்ஷம் ஏக்கரா; மின்சாரம் 99,000 கிலோவாட்; செலவு ரூ. 60 கோடி.

2. பக்ரா நங்கல்: பஞ்சாப் பிரதேசம்; பக்ரா உயரம் 740 அடி, நீளம் 1700 அடி; நங்கல் உயரம் 95 அடி, நீளம் 1000 அடி; பாசனம் 36 லக்ஷம் ஏக்கரா; மின்சாரம் 530,000 கிலோவாட்; செலவு ரூ. 173·54 கோடி.

3. மச்குண்டு: ஒரிஸ்ஸா, உயரம் 176 அடி, நீளம் 1345 அடி, மின்சாரம் 120000 கிலோவாட், செலவு ரூ. 36·38 கோடி.

4. மயூராக்ஷி: மேற்கு வங்காளம், உயரம் 155 அடி, நீளம் 2170 அடி, பாசனம் 7·45 லக்ஷம் ஏக்கரா, மின்சாரம் 4000 கிலோவாட், செலவு ரூ. 16·1 கோடி.

5. பத்ரா; மைசூர் பிரதேசம், உயரம் 252 அடி, நீளம் 1400, பாசனம் 2·34 லக்ஷம் ஏக்கரா, மின்சாரம் 33,200 கிலோவாட், செலவு ரூ. 24·42 கோடி.

6. ஹிராகுத்: ஒரிஸ்ஸா, உயரம் 200 அடி, நீளம் 15,478 அடி, (காங்கிரீட் 3768 அடி) பாசனம் 6·72 லக்ஷம் ஏக்கரா, மின்சாரம் 123,000 கிலோவாட், செலவு ரூ. 70·78 கோடி.

7. காக்ரபாரா: பம்பாய் பிரதேசம், உயரம் 60 அடி, நீளம் 2039 அடி, பாசனம் 6·52 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 11·65 கோடி.

8. கீழ் பவானி: மதராஸ் பிரதேசம், உயரம் 204 அடி. நீளம் கல் 1523 அடி, மண் 27,339. அடி, பாசனம் 2·07 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 9.51 கோடி.

9. தாமோதர் வாலி கார்ப்பொரேஷன்: தில்லையா அணை, உயரம் 99 அடி, நீளம் 1200 அடி, மின்சாரம் 4000 கிலோவாட், செலவு ரூ. 3·66 கோடி.

10. கோனார் அணை: உயரம் 160 அடி, நீளம் 910 அடி, மின்சாரம் 40,000 கிலோவாட், செலவு ரூ. 9·94 கோடி.

11. மைதான் அணை: உயரம் 182 அடி, நீளம் 3234 அடி, மின்சாரம் 60,000 கிலோவாட், செலவு ரூ. 16·74 கோடி.

12. பஞ்சட் குன்று அணை: உயரம் 157 அடி, நீளம் 8362 அடி, மின்சாரம் 40,000 கிலோவாட், செலவு ரூ. 18·25 கோடி.

இந்த அணைகள் வெள்ளத்தைத் தடுப்பதற்காகவே முக்கியமாகக் கட்டப்பட்டிருக்கின்றன.

13. துர்க்காபூர் அடைப்பு: உயரம் 38 அடி, நீளம் 2271 அடி, பாசனம் 10·26 லக்ஷம் ஏக்கரா, கப்பல் போக்குவரத்து 35 மைல் நீளத்துக்கு உதவும். செலவு ரூ. 22·86 கோடி.

14. பொகாரோ மின்சார நிலையம்: பீகார் பிரதேசம், மின்சாரம் 225000 கிலோவாட், செலவு ரூ. 14·64 கோடி.

15. ரிகாண்ட் அணை: உத்தரப் பிரதேசம், உயரம் 271 அடி, நீளம் 3254 அடி, மின்சாரம் 250,000 கிலோவாட், செலவு ரூ. 45·26 கோடி.

16. சம்பல் திட்டம்: முதல் பாகம் காந்தி சாகர் அணை, மத்தியப் பிரதேசம், உயரம் 212 அடி, நீளம் 1680 அடி, மின்சாரம் 92,000 கிலோவாட், செலவு ரூ. 22·44 கோடி.

17. கோடா அடைப்பு: ராஜஸ்தானப் பிரதேசம், உயரம் 120அடி, நீளம் 1970 அடி, பாசனம் 11 லக்ஷம் ஏகரா, செலவு ரூ. 25·59 கோடி

18. கோய்னா: பம்பாய் பிரதேசம், உயரம் 207·5 அடி, நீளம் 2200 அடி, மின்சாரம் 240,000 கிலோவாட், செலவு ரூ. 42·76 கோடி.

19. நாகார்ஜுன சாகர்: முதல் பாகம் ஆந்திரப் பிரதேசம். உயரம் 302 அடி, நீளம் 3900 அடி, பாசனம் 21 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 88·18 கோடி.

20. பெரியார்: மதராஸ் பிரதேசம். உயரம் 93 அடி, மின்சாரம் 105,000 கிலோவாட், செலவு ரூ. 6·75 கோடி.



21. மகாநதி பாசன திட்டம், ஒரிஸ்ஸா பிரதேசம். 436 மைல் பெரிய வாய்க்கால்களும், 2015 மைல் கிளை வாய்க்கால்களும், பாசனம் 18·67 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 14·92 கோடி.

22. கங்கை அணை: மேற்கு வங்காளப் பிரதேசம். உயரம் 126 அடி, நீளம் 6 மைல், பாசனம் 8 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 25·26 கோடி.

23. குண்டா: மதராஸ் பிரதேசம். மின்சாரம் 180,000 கிலோவாட், செலவு ரூ. 35·44 கோடி.

24. சராவதி மின்சாரத் திட்டம்: மைசூர் பிரதேசம். உயரம் 152 அடி. நீளம் 1270 அடி, மின்சாரம் 178,000 கிலோவாட், செலவு ரூ. 22·97 கோடி.

25. கடானு: பம்பாய் பிரதேசம். உயரம் 255 அடி, நீளம் 3750 அடி, பாசனம் 5·3 லக்ஷம் ஏக்கரா, செலவு ரூ. 14.04 கோடி.

26. கோர்பா மின்சார நிலையம்: மத்தியப் பிரதேசம். மின்சாரம் 90,000 கிலோவாட், செலவு ரூ. 12·34 கோடி.

27. கோசி: பீகார் பிரதேசம். நீளம் 1 மைல், பாசனம் 13·97 லக்ஷம் ஏக்கரா. செலவு ரூ. 44·6 கோடி.

28. தாவா: மத்தியப் பிரதேசம். உயரம் 198 அடி, நீளம் 720 அடி, பாசனம் 3·90 லக்ஷம் ஏக்கரா. செலவு ரூ. 18·34 கோடி.

29. யமுனா: உத்தரப் பிரதேசம். மின்சாரம் 171,000 கிலோவாட், செலவு ரூ. 19·59 கோடி.

அவ்விதமே விஞ்ஞான ஆராய்ச்சியிலும் பெயரளவில் முன்னேற்றமடைந்து ஆசியாவிலேயே பாரதம் முன்னணியில் நிற்கிறது. சுதந்திரத்துக்கு முன் பங்களூரில் டாடா விஞ்ஞான ஆராய்ச்சிக் கழகமும், வேறு ஒன்றிரண்டு ஸ்தாபனங்களுமே இருந்தன. இந்தப் பத்து வருஷங்களில் பின்வரும் ஆராய்ச்சிகளுக்குப் பெரும் ஸ்தாபனங்கள் அமைக்கப்பட்டன. இயற்கை சக்தி ஆராய்ச்சி; ரசாயன ஆராய்ச்சி; உலோக ஆராய்ச்சி; உணவுப் பொருள் ஆராய்ச்சி; நிலக்கரி முதலிய எரிபொருள் ஆராய்ச்சி; கண்ணாடி, பாண்டம் செய்யும் களிமண் ஆராய்ச்சி; தோல் ஆராய்ச்சி, ரசாயன மின்சார ஆராய்ச்சி; மருந்துப்பொருள் ஆராய்ச்சி; உப்பு ஆராய்ச்சி; மூலிகை ஆராய்ச்சி; ரயில் தளவாடங்களின் ஆராய்ச்சி; தந்தி, தபால்கருவிகள் ஆராய்ச்சி. நாட்டின் சுரங்கப் பொருள்களைப் பற்றியும் சீதோஷ்ணத்தைப் பற்றியும், ஸ்தாவர ஜங்கமங்களைப் பற்றியும் பரிசீலனை மும்முரமாக நடந்து வருகின்றது. விவசாயம், தொழில், சமுதாய அபிவிருத்தி, தேசிய விஸ்தரிப்பு முதலியவற்றில் இந்தியா அடைந்திருக்கும் வளர்ச்சி முன் அங்கங்களில் சுருக்கமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால் சென்ற பத்து வருஷ சுதந்திரத்தை நன்கு உபயோகித்திருக்கிறோம். ஆயினும் நாட்டின் வறுமையொழிந்து பாரத மக்கள் அனைவரும் போதிய உணவும், சுத்தமான உடையும், சௌகரிய

மான வீடும் அடைந்து தங்கள் ஆற்றலுக்கேற்ற தொழிலும், கண்ணிய வாழ்க்கைக்கு அவசியமான ஊதியமும் பெற்றுச் சுகமாக வாழ்வதற்கு வெகு தூரம் செல்ல வேண்டும். அதை எண்ணி நாம் சில வேளை மனச் சோர்வு அடைவதும் சகஜமே. ஐரோப்பிய நாடுகளில் நபர் வருமானம் நமது நாட்டைவிட 10 மடங்குக்கு மேலிருக்கிறது. வட அமெரிக்காவில் ஏறக்குறைய 20 மடங்கு இருக்கிறது. அனைவருக்கும் வயோதிக காலத்தில் பென்ஷன் கொடுக்கப்படுகிறது; வேலையில்லாத சமயத்தில் உதவிச் சம்பளம் வழங்கப்படுகிறது; வைத்தியம் இலவசமாகக் கிடைக்கிறது; பெரும்பாலும் சிமெண்ட், தார் ரோடுகளாகவே இருக்கின்றன; ரயில் பிரயாணம் அதிக சௌகரியமாக இருக்கிறது. மற்றும் பலவிதங்களில் வாழ்க்கை சுகமாக இருக்கிறது.

பாரதத்தின் ஜனத்தொகை தற்சமயம் வருஷத்துக்கு 50-60 லட்சம் விகிதம் பெருகி வருகிறது. 1975ல் 50 கோடியைக் கிட்டி விடும். இன்றே இந்திய மக்கள் அனைவரும் தம்பதிக்கு இரண்டு குழந்தைகளுக்கு மேல் பெறுவதில்லை என்று சபதம் செய்து அதை நிறைவேற்றினாலும் அடுத்த இருபத்தைந்து வருஷங்களுக்கு ஜனத்தொகையின் பெருக்கைத் தடுக்க முடியாது. சுகாதார முயற்சிகள் அதிகரிப்பதால் அகால மரணம் குறைந்து ஜனப்பெருக்கத்தின் விகிதம் அதிகமாகக் கூடும். தற்போதைய முக்கால் வயிற்றுச் சாப்பாட்டுக்கே, ஆண்டுதோறும் 5 லட்சம் டன் தானியம் அதிக உற்பத்தியாக வேண்டும். பாரத மக்கள் அனைவரும் வயிறார உண்டு, உடல் நிறைய உடுக்கும் காலம் எப்பொழுது வரும் என்று எவரும் நிச்சயமாகக் கூற முடியாது.

இதனால் மனந் தளர்ச்சி அடைவது மூடத்தனம். மனித முயற்சியால் இயற்கை சாதனங்கள் குறைவாயிருந்தாலும் சமூகம் முன்னேற முடியும் என்பதற்கு இரண்டாவது மகாயுத்தத்தில் தோல்வியுற்று நாசமடைந்த ஜப்பானும், மேற்கு ஜெர்மனியும் சிறந்த வழிகாட்டிகளாக விளங்குகின்றன. யுத்த அழிவுகளை யெல்லாம் பூர்த்தி செய்து இவ்விரண்டு நாடுகளும் வெற்றி பெற்ற பிரிட்டன், பிரான்ஸ் முதலிய தேசங்கள் பொறாமைப்படும் நிலைக்கு வந்திருப்பதற்கு ஜப்பான், ஜெர்மனி மக்களின் உழைப்பும், திறமையுமே முக்கிய காரணங்கள்.

நமது நாட்டில் 10 கோடி உழைப்பாளிகள் இருந்தும் அவர்கள் உழைப்பின் பலன் இந்நாடுகளில் 2, 3 கோடி தொழிலாளர்களின் உழைப்பின் அளவே இருக்கிறது. நமது விவசாயிகளும், தொழிலாளிகளும் புராதனமுறைகளில் வேலை செய்வதாலும், நல்ல நூதன கருவிகளும், சாதனங்களும் இல்லாததாலும் உழைப்பின் பலன் கம்மியாக இருப்பதற்கு ஒரு காரணமாகும். ஆனால் துணி மில்களிலும், ரயில்வேயிலும் கருவிகளுக்கும், சாதனங்களுக்கும் குறைவில்லை. அப்படியிருந்தும் மற்ற நாடுகளில் ஒருவன் செய்யும் வேலைக்கு இங்கு மூன்று நான்கு நபர்கள் அமர்த்த வேண்டியிருக்கிறது. நமது அரசாங்கக் காரியாலயங்

களில் தற்மயம் இருக்கும் சிப்பந்திகளில் பாதிப் பேர்களைக் கொண்டு வேலைகளைச் செய்வனே செய்ய முடியுமென்று நிபுணர்கள் கூறுகின்றனர். நமது உழைப்பாளிகளின் வேலைத் திறமையை உயர்த்துவது நாட்டின் முன்னேற்றத்துக்கு இன்றியமையாதது. இது சட்டங்களாலும், தண்டனைகளாலும் ஆகும் காரியமல்ல. மக்களின் மனச்சாட்சியின் தன்மை உயர்ந்து, பொதுநல உணர்ச்சி பெருகி, திறமையாக வேலை செய்வது சுயமரியாதையின் முக்கிய அம்சமென்ற மனோபாவம் பரவும்பொழுதே உழைப்பின் பலனும் போதிய அளவு விருத்தியாகும்.

ஐரோப்பாவிலும், வட அமெரிக்காவிலும் விவசாயிகள் உழைப்பாளிகளில் மிகவும் சிறுபாலர். ஆனால் நூதன யந்திரங்களையும், கருவிகளையும், உரங்களையும் கொண்டு விவசாயம் செய்வதால் ஒவ்வோர் விவசாயியும் 50,100 ஏக்கராக்களை விவசாயம் செய்வது சாத்தியமாகிறது. அவ்வித நிலை இங்கு வெகு காலத்துக்கு ஏற்பட முடியாது. எப்பொழுதும் எதிர்பார்க்கலாகாது என்றும் கூட வாதிக்கலாம். ஆயினும் அடுத்த ஐம்பது வருஷங்களுக்குள் பாரதத்தின் உழைப்பாளிகளில் 100-க்கு 50 நபர்கள் விவசாயத்திலும், மற்ற 50 நபர்கள் இதர தொழில்களிலும் ஈடுபட வேண்டுமென்று விரும்பி, அதற்கு வேண்டிய திட்டங்கள் செய்வது நலமென்று தோன்றுகிறது. விவசாய நிலத்தை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்து, 2, 3 ஏக்கர் பண்ணைகளாக்குவது வறுமையை ஊர்ஜிதப்படுத்துவதாகும்.

சிறிய தொழில்களில் கூடப் புதிய கருவிகளையும், மின்சார சக்தியையும் உபயோகிப்பதும் புத்திசாலித்தனமாகும். ஆலைகளில் வேலை செய்வோர் தினம் 4, 5 ரூபாய் ஊதியம் பெறும்பொழுது, குடிசைத் தொழிலில் உடல் உழைப்பைக் கொண்டு 1 ரூபாய் கூலி பெற்றுத் திருப்தியடையவேண்டு மென்றால் குடிசைத் தொழிலாளிகள் சம்மதிக்க மாட்டார்கள். அப்படி அவர்கள் சம்மதித்தாலும், குடிசைத் தொழிலாளிகள் ஒரு தாழ்ந்த வகுப்பினராகக் கருதப்பட்டு நாம் ஒழிக்க முயற்சி செய்யும் ஜாதி வித்தியாசங்கள் புதிய கொடிய முறையில் ஏற்பட்டுவிடும்.

செல்வம் படைத்த நாடுகளில் மதுபானம், சூதாட்டு முதலிய தீய பழக்கங்களிலும், வீண் ஆடம்பரங்களிலும் நாட்டின் வருமானத்தில் ஒரு கணிசமான பங்கு அழிந்து விடுகின்றது. ஆதலால் ஒரு சமூகத்தின் வாழ்க்கைத் தரத்தை மதிப்பிடும்பொழுது இந்த வீண் செலவுகளைக் கழித்துக் கணக்கிட வேண்டும். சீதோஷ்ண ஸ்திதியின் வித்தியாசங்களின் காரணமாக உடை, வீடு முதலியவற்றில் இந்தியன் குறைந்த செலவில் ஐரோப்பியனைப் போல் மானமாக வாழலாம். நமது தேசத்தின் மொத்த வருமானம் தற்போதைய ரூ. 10,000 கோடியிலிருந்து ரூ. 60,000 கோடியாகி நமது ஜனத்தொகை விருத்தி ஐரோப்பிய நாடுகளின் விருத்தி அளவுக்குக் குறைக்கப்பட்டால், இந்தியாவின் வாழ்க்கைத் தரம் ஐரோப்பாவில் தற்போதைய தரத்துக்குச் சமானமாகக் கூடும். திட்டக் கமிஷனின் யோசனைப்படி 1975-ல் ரூ. 27270 கோடிக்கு அதிகரிக்க வேண்டும். அதே வேகத்தில் தேசிய வருமானம் வளர்ந்தால் 2000-ல் நமது வறுமை தீருமென்று எதிர்பார்க்கலாம். அப்பொழுதும் ஒவ்வோர் குடும்பமும் மோட்டார் வண்டி வைத்துக் கொள்ளக்கூடிய தற்போதைய அமெரிக்க ஐசுவரியம் இராது. அது அவசியமுமில்லை. மிதமிஞ்சிய செல்வத்தால் அமெரிக்க சமூகத்தின் சுகமோ, திருப்தியோ உச்ச நிலை அடைந்திருப்பதாகத் தெரியவில்லை.

பாரதத்தின் பொருளாதார நிலையைச் சுருக்கமாகப் பரிசீலனை செய்த இந்நூலின் முடிவுகள் என்னவெனின் :

1. ஜனத்தொகைப் பெருக்கைக் குறைப்பதற்கு உடனே தீவிரமான முயற்சி செய்ய வேண்டும்.

2. விவசாயத்தைக் கூடிய வரையில் நூதன விஞ்ஞான முறையில் நடத்துவதோடு அதனால் வாழும் குடும்பங்கள் அதிகரிக்காமல் மற்றத் தொழில்களை விருத்தி செய்து அவற்றால் பிழைக்கும் தொழிலாளரின் தொகையை அதிகரிக்க வேண்டும்.

3. குடிசைத் தொழில்கள் உள்பட எல்லாத் தொழில்களுக்கும் புதிய கருவிகளையும், மின்சார சக்தியையும் உபயோகிக்கவேண்டும்.

4. வேலைத் திறமையையும், கருத்துடன் முனைந்து வேலை செய்யும் சம்பிரதாயத்தையும் வளர்க்க வேண்டும்.

5. மதுபானம் போன்ற தீய பழக்கங்களையும், வீண் ஆடம்பரங்களையும் விலக்க வேண்டும்.

6. எளிய பரிசுத்தமான வாழ்க்கையில் பெருமை கொள்ள வேண்டும்.

7. சர்க்கார் சேவகர்களும், ஆலைத் தொழிலாளர்களும் உயர்ந்த வகுப்பினராகக் கருதப்படாமல் அவர்களுக்கும், விவசாயிகளுக்கும் சிறு தொழில்களில் பணி செய்வோருக்கும் வருமானத்திலும், வாழ்க்கைத் தரத்திலும் அதிக வித்தியாசமில்லாமல் இருக்கவேண்டும்.

8. அவ்வாறே பாரதத்தின் பல பிரதேசங்களின் செல்வ நிலையில் அதிக தாரதம்யமில்லாமல் தொழில்களை நாடெங்கும் பரப்பியும் மத்திய அரசாங்க வரி விகிதம், ராஜ்யங்களுக்கு அளிக்கும் மானியமுறை முதலிய வழிகளின் மூலமாகவும் கூடியவரையில் சமத்துவம் ஏற்படுத்த வேண்டும்.

9. நாட்டின் பொருளாதார முன்னேற்றம் அரசாங்க முயற்சிகளால் மட்டும் சாதிக்க முடியாது. பொதுமக்கள் அறிவுடன், உற்சாகத்துடன் ஒத்துழைத்தால்தான் அது சாத்தியமாகும் என்ற உண்மையை ஆண், பெண், குழந்தைகள் எல்லோரும் உணர்ந்து, நாட்டின் நலத்தை நாட வேண்டும்.

10 பொருளாதார முன்னேற்றம் மிகவும் முக்கியமாயினும் அதற்காக ஜனநாயகத்தையும், சுதந்திரத்தையும் பலி கொடுக்க முற்றிலும் மறுத்து, எதேச்சாதிகாரத்தை எதிர்க்க உயிரைக் கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டும்.

(முற்றும்)

# பாக்ஸிங் சுப்பையா

நாகன்

ஈப்போ நகரிலிருந்து தைப்பிங்குக்குச் சரக்கு சுமந்து செல்லும் லாரி ஒன்றின் டிரைவர் தான் சுப்பையா. அன்றைய தினம் ஏதோ கோளாறினால் பாதையில் நின்றுபோன லாரிக்குக் காவலாக 'கிளீனர்' கந்தசாமியை வைத்துவிட்டு, பக்கத்தில் தென்பட்ட தோப்புக்குள் நுழைந்தான், உதவி தேட. அங்கு போன சமயம்தான், மலாய் மொழியில் "எங்கே போகிறீர்கள்?" என்று ஒரு பெண்குரல் அவனை நிறுத்தியது.

சுப்பையாவும் நின்றான். குரல் வந்தபக்கம் அவன் முகம்திரும்பியது. ஒரு செடிக்குப் பின்னால் அவள் நின்றாள்.

செடிக்கு மேல் பூத்து நிற்கும் முகமலர் மட்டுந்தான் சுப்பையாவுக்குத் தெரிந்தது. இந்திய நாட்டின் அஜந்தாக் கொண்டையின் இனத்தைச் சார்ந்த ஒரு கொண்டை அவள் உச்சந்தலையில் கருங் கிரீடமாய் நின்று அந்த அழகிய முகார விந்தத்துக்குச் சோபை சேர்த்தது.

செடிக்கும் அப்பால் எட்டிப் பார்த்தால் முழுக்கை வெள்ளைக் 'கபாய்' ஒன்று தெரிந்திருக்கும். மெல்லிய ஒரு தாவணி மார்பகத்தை மூடியிருக்கும். இடுப்பைச் சுற்றிக் கண்ணைக் கவரும் வண்ணத்தில் 'கயின்' ஒன்று சுற்றியிருப்பதும் தெரிந்திருக்கும். இத்தனையும் அவள் ஒரு மலாய்ப் பெண் என்பதை உணர்த்தியிருக்கும்.

முகமலரைக் கண் வண்டு மொய்க்கும் முன்பே சுப்பையாவின் காதில் விழுந்த குரல் இனிமையிலும் இனிமையாக இருந்தது. அந்த இனிமைக்கு எழில் விளக்கமாகத் தோற்றம் தந்தது முகம்.

மலேயா தேசத்தின் ரம்புத்தான் பழத்தைப்போல் சிவந்த உதடுகள். புத்தம் புதுரப்பர் பாலின் வெண்மையும், பளபளப்பும் வீசிய பல் வரிசை. வாலிப மத மதப்பை ஜன்னலாக் காட்டி நின்ற குறுகுறுத்த கண்கள். சிறு புருவங்கள். பிறை நெற்றி: அந்த நெற்றியிலிருந்து மேல் நோக்கி அழுந்தச் சீவியதால் மினு மினுத்த கருங்கூந்தலின் ஆரம்பம்.

இப்படியான அழகு முகம் ஒன்று சுப்பையாவை வழிநிறுத்தி வாய்திறந்தும் பேசினால்?

"சிக்கி ஆயர்!" என்று மலாய் மொழியில் பேச்சை ஆரம்பித்தான். அதாவது "கொஞ்சம் தண்ணீர் வேண்டும்..." என்று ஆரம்பித்து, தயக்கமோ தட்டுத்தடுமாற்றமோ இல்லாமல் தான் செலுத்திவந்த லாரி சிறிது பழுதாகிப் பாதையில் நின்று விட்டதையும் அது சம்பந்தமாகத் தனக்குத் தேவைப்படும் உதவியையும் பற்றிச் சொன்னான் சுப்பையா.



அதோடு, தான் அடிக்கடி ஈப்போ தைப்பிங் பாதையில் சவாரி போவதுண்டு என்றும் அப்போதெல்லாம் அழகான அந்தத் தோப்பைப் பார்த்து ரசித்திருப்பதாயும் அவன் சொன்னான்.

அவள் மெல்ல நகைத்தாள். சிரிப்பில் சீனத்துக் கற்கண்டின் சுவையும், மலாயா டுரியான் பழத்தின் ருசியும் கலந்திருப்பதாகச் சுப்பையாவுக்குப் பட்டிருக்கும். அதை அவன் எப்படி ரசித்து ருசித்தான்!

மலாய் மொழியில் 'இப்படி வாருங்கள்' என்று கூப்பிட்டவண்ணம் அந்த மலாய்ப் பெண் முன் நடந்தாள்.

செடியை விட்டு நகர்ந்தவளைச் சுப்பையா வால் நன்றாகப் பார்க்க முடிந்தது. வெல்வெட் தலையணையில் கூட்டியும் குறைக்காமலும் சரியான அளவில் பஞ்சு திணித்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி இருந்தது உடம்பு. அந்த உடம்பைக் கிள்ளி எடுப்பது போல் ஆடைகள் அதைக் கவ்வியிருந்தன. அவன் எதிர்பார்த்தது போலவே வெள்ளை



ஆர்கண்டித் துணியில் முழுக் கை ஜுப்பாவைப் போன்ற அவள் 'கபாய்' உடுத்தியிருந்தாள். இடுப்பின் கீழே மெல்லச் சலசலத்த அந்தப் பட்டு 'சரோங்' அவள் நடைக்கு மின்வெட்டை, ஒரு தகதகப்பைச் சேர்த்தது.

சுப்பையாவுக்கு ஒரே மயக்கம்!

அந்த ஈப்போ-தைப்பிங் பாதையைப் பல தடவைகள் மனசுக்குள் வாழ்த்தினான்.

அன்றைக்கென்று தான்பார்த்துப் பழுதான லாரியை அதைவிட வாழ்த்தினான்.

அவன் கேட்டது போல வாளி நிறையத் தண்ணீர் கிடைத்தது; இரண்டு பையன்களின் துணையும் கிடைத்தது. இத்தனையும் அந்த மலாய் மங்கையின் உதவியால் தான் கிடைத்தது.

சுப்பையா தண்ணீரோடு லாரிக்கு வந்தான். அவளும் வந்தாள். ஆனால் சற்றுப் பின் தள்ளி நடந்து வந்தாள். இரண்டொரு முறை சுப்பையா நாகுக்காக அவளைத் திரும்பிப் பார்க்கத் தவறவில்லை. அந்த இரண்டொரு முறையும் சிரிப்பால் கழித்த கண்ணும் அதே சிரிப்பால் மலர்ந்த கண்ணும் அவன் பார்வையை எதிர்கொண்டு அழைத்தன! சுப்பையாவுக்கு மெய் சிலிர்த்தது.

அந்தநாள் வரையிலும் அனுபவித்தறியாத ஒரு புது நிலையில் உருவான உற்சாகத்தோடு லாரியின் பழுதைச் சீராக்கினான் சுப்பையா. வாளியைத் திரும்பவும் எடுத்துப் போக ஒரு பையன் முன்வந்தான். ஆனால் சுப்பையாவே அதை எடுத்துக் கொண்டு கிளம்பினான். 'அண்ணே!' என்று கொஞ்சம் குறும்பாகக் கந்தசாமி அழைத்ததையும் அவன் பொருட்படுத்தவில்லை!

வாளியை அவளிடம் கொடுத்தான். பல முறை வணக்கமும் நன்றியும் சொன்னான். சிரிப்போடு தலையசைத்து அவன் மனசையும் நிலை குலைத்து விட்டு அவளும் போனாள். போனவளும் வளைந்த பாதையில் திரும்பும் சாக்கில் திரும்பி ஒருமுறை பார்த்தாள். கட்டுமஸ்தான அவன் உடம்பை அப்பிப் பூசியது போல மூடியிருந்த காக்கிச் சட்டையின் பைக்குள் இருப்பதைச் சரி பார்க்கும் பாவனையில் அங்கேயே நின்று கொண்டிருந்த சுப்பையாவும் அவளைப் பார்த்தான். மீண்டும் சிரித்து விட்டு மின்னலென மறைந்து விட்டாள் அவள்!

அவள் பெயர் சுலேகா. மலேயா தீபகற்பத்தின் பூர்வ குடியின் வழி வந்தவள். சுப்பையாவோ பாரதத்தில் தமிழகத்தைச் சேர்ந்தவன். இந்த இருவருந்தான் காதலில் கட்டுண்டார்கள். "கண்ணொடு கண்ணிணைக்" கெளவிய அந்த முதற் பார்வையிலிருந்து, பார்வை ஒத்துப் போனதால் வாய்ச் சொற்கள் பயனற்றுப் போன அந்த நேரத்திலிருந்து இருவரும் காதலன், காதலி ஆனார்கள்.

தங்களுக்குள் இருந்த இன வேறுபாடு தெரிந்தேதான் இருவரும் காதலின் மோகனச் சக்திக்கு ஆளானார்கள்.

இரும்பின் வலிமையும், எஃகின் உறுதியும் கொண்டிருந்த சுப்பையாவின் உடல், அவனை ஒரு பொழுதுபோக்கு வேலையில் ஈடுபடுத்தியிருந்தது. அதுதான் 'பாக்ஸிங்', குத்துச் சண்டை. தமிழ் நாட்டில் மல் யுத்தம், சிலம்

பம் எவ்வளவு சாதாரணமாய் இருந்ததோ. அதையும் விடச் சாதாரணமாய் 'பாக்லிங்' மலேயா தீபகற்பம் எங்கும் பரவியிருந்த ஒரு விளையாட்டாக இருந்தது. 'பாக்லிங்' சுப்பையா என்றால்தான் அவனை எல்லாருக்கும் நன்றாகத் தெரியும்.



எப்போவிலிருந்து என்று, எப்போது சுப்பையாவைச் சுமந்து செல்லும் லாரி அந்த வழியே வரும் என்பது சுலைகாவுக்கு நன்றாகத் தெரியும். எல்லாம் அவனுக்குச் சுப்பையா சொல்லித்தான்!

வரும் லாரியும் ஒதுக்குப் புறமான ஒரு இடத்தில் சற்று ஒதுங்கி நிற்கும். கொஞ்ச நேரந்தான் சுப்பையாவும் சுலைகாவோடு பேசுவான். அந்தக் கொஞ்ச நேரத்தில் அடையும் காதல் உணர்வோ கடலைவிட ஆழமாக, வான முகட்டை விடப் பரந்ததாக இருக்கும்!

லாரியில் எவ்வளவு நேரத்துக்குத்தான் அங்கே நிற்க முடியும்? நெஞ்சகத்தை விட்டு நீங்காத பார்வையோடும், பிரியா விடையோடும் சுலைகாவை விட்டுப் பிரிந்து செல்வான் சுப்பையா.

சுப்பையாவுக்கு ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமான பலகாரங்கள் கொண்டு வந்து தருவாள் சுலைகா.

லாரியின் கிளீனர் கந்தசாமிக்கு இவர்களது நட்பைக் கண்டு கவலையும் இருந்தது; பயமும் இருந்தது. சுப்பையாவுக்கோ இரண்டும் இருந்ததாகவே தெரியவில்லை. அவன் சுபாவத்தில் நல்லவன்தான்—முரடனல்ல! ஆனால் அவன் ''பாக்லிங்'' சுப்பையா. பலசாலியான அவன் எடுத்ததற்கெல்லாம் பயப்படுவதில்லை.



சுப்பையாவும் சுலைகாவும் சந்தித்து, நெஞ்சோடு நெஞ்சம் கலந்து சில காலம் கழிந்தது. கல்யாணத்துக்கான ஏற்பாடுகளைச் செய்வதில் சுப்பையா முனைந்தான்.

ஒரு நாள், தைப்பிங்கிலிருந்து திரும்பிய சுப்பையா, குளித்து விட்டு வெள்ளை உடை அணிந்து பஜாரின் பக்கமாகப் புறப்பட்டுப் போனான். அன்றும் சுலைகாவின் நகை முக தரிசனமும், பார்வையால் குளிர்ச்சியும், பேச்சால் இன்பமும் அவனுக்குக் கிடைத்த சுகானுபவத்தில் பிடியுண்ட மனசோடு நடந்து கொண்டிருந்தான்.

வழியில், பாக்லிங் வட்டாரத்தில் அவனுக்குப் பரிச்சயமான சீன வாலிபன் ஒருவன் எதிர்ப்பட்டான். அவன் கூட ஒரு மலாய் வாலிபன் இருந்தான். சுப்பையாவோடு பேச ஆரம்பித்தான் சீனன். பேச்சு பாக்லிங்கைச் சுற்றி வளையம் போட்டது. இடையே அந்த மலாய் வாலிபனும் சுப்பையாவுக்கு அறிமுகப் படுத்தப்பட்டான். அவனும் ஒரு 'பாக்லிங்' அபிமானியாக இருந்தான்.

அந்த மலாய் வாலிபனை எங்கேயோ பார்த்திருப்பதாகச் சுப்பையாவின் நினைவுத் திரையில் ஒரு சலனம் உண்டாயிற்று. ஆனால் சரியாக நினைவுக்கு வரவில்லை.

பேசிக் கொண்டே மூவரும் பக்கத்திலிருந்த ஒரு காப்பிக் கடைக்குள் நுழைந்தார்கள்.



மூன்று பேருக்கும் தேவையானவைகளைக் கொண்டு வரும்படி கட்டளை யிட்டான் சுப்பையா. முதலில் ரொட்டி வந்தது.

ரொட்டியைச் சாப்பிட்டானதும் அந்த மலாய் வாலிபன் கெட்டிலில் இருந்த காப்பியைக் கோப்பைகளில் ஊற்றினான். சுப்பையாவுக்கும் ஒரு கோப்பையை எடுத்துக் கொடுத்தான். நடக்கவிருக்கும் 'பாக்லிங்' தொடர் வரிசைப் பந்தயங்களைக் குறித்துச் சீன வாலிபனோடு பலமான சர்ச்சையில் இறங்கியிருந்த சுப்பையா கோப்பையை மளமளவென்று காலி செய்தான். பேச்சின் வேகத்தில் இன்னொரு கோப்பையும் கேட்டு வாங்கி, அதையும் குடித்தான்.

இரண்டொரு நிமிஷங்கள் கழிந்தன.

சுப்பையாவுக்குத் தலையில் என்னமோ போல் ஒரு உணர்ச்சி. அடுத்த வினாடி தலை சுற்றத் தொடங்கியது. என்னமோ என்று சுருக்கித் தலையைச் சற்றுக் குலுக்கி விட்டு நெற்றிப் பொட்டுகளை விரலால் பிடித்து விட்டான். அப்போதும் பேச்சை நிறுத்தவில்லை.

தலை ரொம்பவும் வேகமாகச் சுற்றியது. மீண்டும் நெற்றிப் பொட்டுகளைப் பிடித்துக் கொண்ட கப்பையா தற்செயலாகவே அந்த வாலிபனைச் சற்று உற்றுப் பார்த்தான். சட்டென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது.

“ஆம்! அங்கேதான் இந்த மலாய் வாலிபனைப் பார்த்திருக்கிறேன்.”

கலைகாவைச் கப்பையா சந்தித்தானே முதல் நாள்: அப்போது 'கூட வாருங்கள்' என்று அவனும் இவனை அழைத்துப் போனானே: அந்தச் சமயம் தோப்பில் ஒரு வீட்டின் படிக்கட்டின் முன் நின்று தன்னையும் அவளையும் மாறி மாறிப் பார்த்த முகம், இதுதான். அதற்குரியவன்தான் இந்த மலாய் வாலிபன்!

கப்பையாவுக்கு மயக்கம் வந்து விட்டது! தலை கவிழ்ந்து மேஜையில் சாய்ந்தது.

கப்பையா மறுபடியும் கண் விழித்தபோது தான் குடியிருக்கும் அறையில் தன் படுக்கையில் கிடப்பதை அறிந்தான். பக்கத்தில் கிடந்த நாற்காலிகளில் அவன் சக குடித்தனக்காரர்களில் இருவர் உட்கார்ந்திருந்தனர்.

கப்பையா பேச எத்தனித்தான்; முடியவில்லை. அந்த இருவரில் ஒருவர் பேசினார். மயங்கிக் கிடந்த நிலையிலேயே அவனை யாரோ சீன, மலாய்க்காரர் இருவர் அங்கே கொண்டு வந்ததாகக் கூறினார்.

டாக்டர் வரவழைக்கப்பட்டதும், இரண்டு தடவை கப்பையா வாந்தி எடுத்ததால் ஆபத்திலிருந்து அவன் தப்பியதாக அவர் சொன்னதும் அவனுக்கு அறிவிக்கப்பட்டன. பிறகு கப்பையாவுக்குக் காப்பியில் 'அபின்' கலந்து கொடுக்கப்பட்டதை டாக்டர் கண்டறிந்து சொன்னதாகவும் கணிசமான அளவு அபின் உள்ளே சென்றிருந்தும் அதன் சக்தியைப் பலசாலியான கப்பையாவால் தான் தாங்க முடிந்தது என்றும், மற்றவர்களால் அதில் பாதி அளவைக்கூடச் சமாளித்திருக்க முடியாது என்றும் அவர் அறிவித்தார்.

★

இரண்டொரு நாட்களில் கப்பையா பூரணமாகக் குணமடைந்து எழுந்தான். வழக்கம் போலவே அந்த ஈப்போ—தைப்பிங் பாதையில் அவன் காதல் ராணி வாழும் சாம்ராஜ்யத்தைக் கடந்து செல்லும் பாதையில் லாரி ஓட்டும் வேலையைத் துவங்கினான்.

அவன் நினைத்திருந்தபடி அந்தச் சீனனையும் மலாய் வாலிபனையும் அவனால் சந்திக்க இயலவில்லை. ஆனால் கலைகாவைத் தினமும் அவன் சந்தித்தான்.

அன்றொரு நாள் தைப்பிங்கிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தது லாரி. 'ஸ்டியரிங்' முன் கப்பையா உட்கார்ந்திருந்தான். அப்போதுதான் மலேயாவில் திரையிடப்பட்டிருந்த பிரபலமான அந்தத் தமிழ்ப் படத்தில் பாடியிருந்த பாட்டை அவன் வாய் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

ஒரு திருப்பம் வந்தது. 'ஹேர் பின்'—(கொண்டை ஊசி)—வளைவு என்பார்கள் அதை. திரும்பும் முனையில் திடீரென்று பாதையே முடிவடைந்தது போல இருக்கும். அதோடு பாதையின் இரு புறங்களிலும் பெரிய மரங்கள் வரிசையாக இருந்தன.

வழக்கம் போல ஹாரனை நன்றாகச் சப்தித்தான் கப்பையா. லாரியும் சடக்கென்று வளைவில் திரும்பியது. வேகமாகவே தார் ரோட்டில் வழுக்கியபடி திரும்பியது. 'ஆ!... ஐயோ! அதென்ன?'

வளைவு திரும்பியதுமே ரோட்டில் பதினைந்து கஜ தூரத்தில் பழுத்த பழமான ஒரு மலாய்க் கிழவி தள்ளாடியபடி நின்றாள். அந்த நிலையில் பாதையின் ஓரத்தில் எந்தப் பக்கத்திலும் அவளால் ஒதுங்க முடியாது. உடலில் அத்தனை நடுக்கம்; கையிலும் கோலில்லை!

க்ஷணத்தில் சுதாரித்து லாரியின் பிரேக்கைப் போட்டான் கப்பையா. 'சடன் பிரேக்' தான். ஆனாலும் லாரி கிழவியை நெருங்கி விட்டது. லாகவமாக ஸ்டியரிங்கை ஒடித்து வளைத்தான். இருந்தும் கிழவியை உரசி அவளைக் குப்புறத் தள்ளி விட்டுத்தான் லாரி எப்படியோ மரங்களில் மோதிக் கொள்ளாமல் பலமான சப்தத்தோடு நின்றது.

கீழே குதித்துக் கிழவியிடம் கப்பையா ஓடினான். கந்தசாமியும் அவனைப் பின் பற்றினான்.

'என் மேல் மோதவே தேவையில்லை. மெல்ல உரசினாலே போதும்' என்பது போல் கிழவி பிணமாகிக் கிடந்தாள். வானத்தை நோக்கித் திறந்து கிடந்தன கண்கள். இருதயத் துடிப்பும் நின்று விட்டது.

அடுத்து என்ன செய்வது என்ற நினைவோடு கப்பையா கந்தசாமியைப் பார்த்தான். அவனும் எதையோ சொல்ல வாயைத் திறந்தான். ஆனால் சொல்ல முடியவில்லை.

“அடியுங்கள்!” என்று கத்திக் கொண்டே ஒருவன் அவர்களை நோக்கி ஓடி வந்தான். அவன் கையில் ஒரு பெரிய கழி இருந்தது. அவனுக்குப் பின்னால் நால்வர் வேகமாக ஓடி வந்தார்கள். அவர்கள் கையிலும் கழிகள் இருந்தன.

கப்பையா அவர்களைப் பார்த்தான். முன்னால் ஓடி வந்தவனை அவன் அடையாளம் கண்டு கொண்டான். அவன் வேறு யாருமில்லை. தனக்கு முன்பு விஷமிட்ட மலாய் வாலிபன்தான்!

எல்லாம் முன்னேற்பாடாக நடந்திருப்பதாகப்பட்டது கப்பையாவுக்கு. யோசிக்க நேரமே இல்லை. அவனும் ஏதாவது செய்தாக வேண்டுமே?

“கந்தா! ஓடு! போய் லாரியிலே ஏறிக்க” என்று கந்தசாமியைத் தள்ளிக் கொண்டே ஓடினான். போய் டிரைவர் ஆசனத்தின் கீழ் கிடந்த 'ஸ்டார்ட்டிங் ஹாண்டிலை'க் கையில் எடுத்து அதைத் தலைக்கு மேல் ஒரு சுழற்றி, ஓடி வந்தவர்களை எதிர்த்து நின்றான்.

அடுத்த வினாடி மூங்கில் கழிகளும் இரும்பும் மோதித் தெறிப்பதால் உண்டான சத்தம் அமைதியாக இருந்த அந்தப் பிராந்தியம் எங்கும் கேட்டது. தலையிலும் முகத்திலும் அடிபடாமல் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்று 'ஹாண்டிலை' 'விர் விர்' என்று சுழற்றினான் கப்பையா.

மேலே விழும் அடிகளை அவனால் தேக்கிக் கொள்ள முடிந்தது. எதிர்த்து ஒருவனின் மண்டையையாவது பிளக்க முடியவில்லை.

# விரைவில் வருகிறது



அருணா பிலிம்ஸ்

# பொம்மை கல்யாணம்

டைரக்ஷன் :

**R.M.கிருஷ்ணஸ்வாமி**



தயாரிப்பாளர்கள் :

M.ராதாகிருஷ்ணன்

R.M.கிருஷ்ணஸ்வாமி

PARTHAN



**இந்தியாவின் முதல் பரிசுத்த கரணி, நம் நாட்டின் பழக்க வழக்கமான சுத்தம் செய்யும் முறைகளைப் புரட்சிகரமாக மாற்ற**

டெட் செயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட ஒரு பரிசுத்த கரணி. சோப்பவுடர் அல்ல. சோப்பை ஆதாரமாகக் கொண்டும் தயாரிக்கப்பட்டதல்ல. சோப்பைக் காட்டிலும் வெகு சீக்கிரத்தில் சுத்தம் செய்கிறது. அழுக்குகளையும், எண்ணெய்ப் பசைகளையும் துப்புரவாக போக்குகிறது. ஆயினும் டெட்டில் காரமான ரசாயனப் பொருள்கள் இல்லை. கைகளில் பட்டால் இதமாக இருக்கிறது. அது உயர்தர சலவை சோப்புகளைக் காட்டிலும், பரிசுத்தமான உடைகளுக்கும் அவைகளின் நீடித்த உழைப்புக்கும் உத்திரவாதம் அளிக்கிறது.



டெட் பரிசுத்த கரணியாதலால் தரை, பாத்திரங்கள், சுவர்கள் முதலிய எல்லாவற்றையும் சுத்தம் செய்கிறது. அது தரையையும், துணிமணிகளையும் வித்தியாசமில்லாமல் ஒரே மாதிரியாக சிறந்த முறையில் சுத்தம் செய்கிறது.






**தி ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்**

shilpi s-o-m 513 a tam

இடது கையால் கூட அடிகளைத் தடுக்க வேண்டி வந்தது சுப்பையாவுக்கு. எதிர்ப்பவர்கள் ஐந்து பேர்கள். அடியும் ஐந்து திசைகளிலுமிருந்து வந்தது.

கந்தசாமி லாரிக்குள் பம்மிக் கிடந்தான். லாரியில் மூட்டைகள் கிடந்தன. பேச்சுக்கென்று ஒரு கழிகூட இல்லை.

சுப்பையா சளைக்க ஆரம்பித்தான். எஃகு சட்டங்களைப் போல் இருந்தாலும் இரண்டு கைகளிலும் எத்தனை அடிகளைத்தான் தாங்குவது? முதுகிலும், காலிலும் சில அடிகள் பலமாக விழுந்து விட்டன.

சுப்பையாவுக்குக் கால்கள் தடுமாறின. சுருண்டு விழ வேண்டியதுதான் பாக்கி. நல்ல வேளையாக ஹார்ன் சத்தத்தோடு வளைவைத் திரும்பி வந்தது ஒரு மோட்டார். அதற்கு மேல் அந்த மலாய்க்காரர்கள் ஏன் அங்கே நிற்கிறார்கள்? மரங்களின் வழியே மறைந்து ஓடி விட்டார்கள்.



''அண்ணா!'' என்று அலறி லாரியிலிருந்து கீழே குதித்த கந்தசாமி தள்ளாடி நின்ற சுப்பையாவைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

வாய் விட்டுக் கத்தவில்லை என்றாலும் கந்தசாமியின் கண்களில் மளமளவென்று நீர் வெள்ளமாகப் பெருக்கெடுத்தது. அவன் அருமை சுப்பையா அண்ணன் ஐந்து பேரின் அடிகளையல்லவா தாங்கி இருக்கிறான்!

வந்து நின்ற மோட்டார் காரிலிருந்து இருவர் இறங்கினார்கள். அதில் ஒருவர் சீனர்; இன்னொருவர் மலாய்க்காரர்.

★

முழங் கையிலிருந்து முன் கை வரையில் இரண்டு கைகளிலும் சுப்பையா தாங்கிய அடியை வேறு ஏப்பை சாப்பைகளால் தாங்கியிருக்கவே முடியாது. இரண்டொரு அடியிலேயே அவர்கள் தீர்ந்திருப்பார்கள்.

இப்போது, இரண்டாம் முறையாக, பாக்சிங் கலையால் உரப்படுத்தியிருந்த திடகாத்திரந்தான் சுப்பையாவைக் காப்பாற்றியது.

அடுத்தபடியாக, அவன் நல்ல காலத்தின் அறிகுறியாக ஒரு போலீஸ் அதிகாரி அந்த மோட்டாரில் வந்தது இக்கட்டான ஒரு நிலையிலிருந்து அவனைக் காப்பாற்றியது.

காரில் வந்தவர் ஒரு இன்ஸ்பெக்டர். விபத்து நடந்த இடத்தில் லாரி பிரேக் போட்டிருந்த விதம், பாதையில் அந்தத் திருப்பம் அமைந்திருந்த விதம், கிழவியின் அருகே வந்ததும் வளைக்க வேண்டிய முறையில் லாரியில் வளைந்துத் திருப்பிய தன்மை இவையெல்லாம் ஸ்தலத்திலேயே நேருக்கு நேராகவே கண்டறியும் வாய்ப்பு ஏற்பட்டதால் சுப்பையாவின் மேல் குற்றமே இல்லை என்று சந்தேகத்துக்கு இடமின்றி அவரால் முடிவு செய்ய முடிந்தது. விபத்து தற்செயலாகவே நடந்தது என்றும் அவர் கருதினார். கிழவி இறந்ததால் உண்டான ஆத்திரத்தாலேயே மலாய்க்காரர்கள் தன்னைத் தாக்கியிருக்கக் கூடும் என்று சுப்பையாவும் சொன்னான். தாக்கியவர்களைத் தேடிப் பிடிப்பதில் போலீஸ் இன்ஸ்பெக்டர் முனைந்தார்.

அந்தக் கிழவி தன்னந்தனியாக ரோட்டுக்கு எப்படி வந்திருக்க முடியும்? ஒரு வேளை தன் லாரிவரும் நேரத்தைக் கணக்காகத் தெரிந்து, அவளை அந்த மலாய் வாலிபனே கொண்டு வந்து விட்டு விபத்தில் சிக்க வைத்திருக்கலாம். திட்டப்படி விபத்தும் நடந்து விட்டால் தன்னைத் தாக்குவதற்காகப் பக்கத்தில் ஒளிந்திருந்திருக்கலாம். இதை வெறும் யூகம் என்று எப்படிச் சொல்லி விட முடியும்?

இன்ஸ்பெக்டர் சொன்னது போல எல்லாம் 'ஆக்ஸிடெண்டல்' என்று சுப்பையா எப்படி முடிவு செய்வான்? அவன் காதல் கதையோ, அபினி விவகாரமோ அந்த மலாய் வாலிபனைப் பற்றிய விவரமோ இன்ஸ்பெக்டருக்குத் தெரியவில்லை. ஆகவே தற்செயலாக நடந்த விபத்து என்று கருதி விட்டார் அவர்.

மேற்கொண்டு இன்னதுதான் செய்யவேண்டும் என்ற முடிவுக்குச் சுப்பையா வருவதற்குள், கலைகா ஆஸ்பத்திரிக்கே வந்து சேர்ந்துவிட்டாள்.

இரண்டு முழங்கை வரையிலும் பலமான கட்டுகளோடு படுத்திருந்த தன் ஆருயிர்க் காதலனைப் பார்த்து விம்மினாள்.

''அழாதே, கலைகா! எனக்குப் பெரிய ஆபத்து ஒன்றுமில்லை'' என்று சுப்பையா சமாதானமாகச் சொல்லியும் கொஞ்ச நேரம் அழுத பிறகுதான் பேச ஆரம்பித்தாள். விம்மலுக்கும் பெருமூச்சுக்கும் இடையே அந்த மலாய் வாலிபனைப்பற்றிச் சொன்னாள்.

தகப்பனைப் பால்யத்தில் இழந்து தாயோடு வாழ்ந்து வரும் கலைகாவை மணக்க வேண்டும் என்று ஆவலாய் இருந்தவன் அந்த வாலிபன்; ஆனால் கலைகாவுக்கோ அவனது முரட்டுச் சுபாவமும், பொல்லாத சகவாசமும் பிடிக்கவே இல்லை. சரியான சமயத்தில் சுப்பையாவைச் சந்தித்திருக்கிறாள். நெஞ்சால், நினைவால், சொல்லால் அவனைக் காதலித்து உடனேயே தன்னை அவனுக்கு ஒப்புவிக்கும் நிலைக்கும் வந்து விட்டாள். இதை ஆரம்பத்திலேயே கண்டு கொண்டான் அந்த வாலிபன். தனக்குப் போட்டியாக முளைத்தவனை அவன் குறி வைத்தான். அதிலும் அவன் ஒரு இந்தியனென்று தெரிந்ததும் கொன்று விடவே குறியையும் வைத்து விட்டான்.

''கலைகா! நான் அடிபட்டது உனக்கு எப்படித் தெரியும்?'' என்று வியப்புடன் கேட்டான் சுப்பையா.

அதை அவனுக்குச் சொன்னவன் அந்த மலாய் வாலிபன்தானும். சரிதான்! செய்ததையும் செய்துவிட்டு ஜம்பத்தோடு போய் அவனிடம் சொல்லியும் இருக்கிறான். பொல்லாத பயல்தான்!

★

காயங்கள் ஆறின. கட்டுக்களும் அவிழ்க்கப் பட்டன.

கலைகாவால் காட்டப்பட்டு அந்த மலாய் வாலிபன் பிடிபட்டான். அவனோடு மற்றவர்களும் பிடிபட்டார்கள். குற்றவாளிகளுக்குத் தலைக்கு இரண்டு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

கலைகாவோ, சுப்பையாவோ மனம் வைத்திருந்தால் அந்த மலாய் வாலிபனுக்கு அதிகமான தண்டனை கிடைத்திருக்கும். அவன் ஈப்போவை விட்டே வெளியேறிப் பினங்கு போவதென்ற முடிவுக்கு வந்திருந்தான். ஆகவே வழக்கில் அக்கறை கொள்ளவில்லை.

தான் விரும்பியதுபோல் தன்னை வந்தடைந்த வாழ்க்கைத் துணைவி கலைகாவுடன் மனம் நிறைந்த சந்தோஷத்தோடு ஈப்போவை விட்டுப் பினங்குக்குப் புறப்பட்டான் சுப்பையா.

பினங்கில் சந்தோஷமாகவே தம்பதிகளின் காலம் கழிந்தது. அவர்களின் அன்யோன்யம் எல்லோரின் அபிமானத்தையும், நன்மதிப்பையுமே பெற்றது.

பினங்கிலும் லாரி டிரைவர் வேலையே சுப்பையாவுக்குக் கிடைத்தது. போதுமான வருமானமும் கிடைத்தது.

இரண்டு வருஷங்கள் கழிந்தன. கலைகா கர்ப்பிணியானுள். சுப்பையாவுக்கு ஒரே குதூகலம்.

பேறு காலம் வந்தது. கலைகா பிரசவ ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டாள்.

அன்று இரவுக்குள் குழந்தை பிறந்துவிடும் என்றுடாக்டர் அம்மாள் சொல்லியிருந்தாள். சுப்பையாவுக்கு ஒரே பரபரப்பு. அவனுக்கு இருப்பே கொள்ளவில்லை. வெளியே வந்தான்.

அப்படி வந்தவன் ஆஸ்பத்திரி இருந்த அந்த ஏழு முகச் சந்தியிலிருந்து வீடு வரைக்குமே வந்து விட்டான்.

வீட்டுக்குள் நுழைந்து முன் ஹாலில் கிடந்த ஒரு நாற்காலியில் தொப்பென்று விழுந்தான். சுவரெல்லாம் அவனும் அவளுமாகச் சேர்ந்து சேர்ந்து எடுத்துக் கொண்ட படங்கள். அத்தனையிலும் அவள் சிரித்த முகம். அது ஆஸ்பத்திரியில் என்ன பாடுபடுகிறதோ?

சிந்தனையில் புதையுண்டு கிடந்த சுப்பையா சத்தம் எழுப்பாமல் ஹாலுக்குள் நுழைந்த ஒருவனை உடனே கவனிக்கவில்லை.

படக்கென்று கதவு மூடப்பட்டது. தாழ்ப்பாள் போடும் சத்தம் கேட்டது.

சுப்பையா திரும்பிப் பார்த்தான்.

அந்த மலாய் வாலிபன் நின்றுன்.

''உட்காரு'' என்ற சுப்பையா ஒரு நாற்காலியைக் காட்டினுன்.

அவன் உட்காரவில்லை. நிஜார்ப் பைக்குள் கையை விட்டு அதை வெளியே எடுத்தான். கையில்...?

கையில் ஒரு ரிவால்வர் இருந்தது!

சுப்பையாவுக்கு எதுவும் தோன்றவில்லை. அப்பொழுது அவன் எதை நினைப்பான்?

இருவர் கண்களும் சந்தித்தன. சுப்பையாவின் பார்வையில் அந்த மலாய் வாலிபன் எதைப் படித்தானே? அவன் விரல் ரிவால்வரின் குதிரையை அழுத்தவில்லை. ஆபத்து வேளையில் மிருகங்கள்கூட ஒன்றுக்கொன்று அனுசரணையாக நடந்து கொள்கின்றன. மிகவும் முரடனுயிருப்பவன் மனத்திலும் இரக்க உணர்ச்சி சமயத்தில் தலை தூக்கும் போலும்.

கழிவிரக்கம் என்பது இதுதானு?

''என்ன சங்கதி? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?'' என்று கேட்டான் மலாய் வாலிபன். அவனை அப்படிக் கேட்க வைத்தது கவலைக் காரிருள் கப்பியிருந்த சுப்பையாவின் முகமும் அதிலிருந்து பிறந்த சோகப் பார்வையும்.

''கலைகா......''

''அவளுக்கு என்ன? எங்கே அவள்?''

''ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். பிரசவ வேதனையில் துடித்துக் கொண்டிருக்கிறாள்.''

மலாய் வாலிபன் பேசவில்லை. துப்பாக்கியைப் பிடித்திருந்த விரல்கள் இறுகின. நரம்புகள் விம்மிப் புடைத்தன. கண்களில் கொடுமையைக் காணும். கனிவின் சாயை தென்பட்டது.

''நீ எதற்காக இங்கே வந்தாய்?''

''நான் முழுதும் அங்கேதான் இருந்தேன். கலைகாவுக்கு வலியும் வேதனையும் அதிகமாக இருப்பதாகச் சொன்னார்கள். எனக்கு என்னமோ போலிருந்தது. இங்கே வந்து விட்டேன்.''

கைகளால் தலையைத் தாங்கிக் கண்ணையும் மூடிக்கொண்டான் சுப்பையா. அந்த நிலை மலாய் வாலிபனின் நெஞ்சைச் சுண்டி இழுத்திருக்கும் போலும்! அவன் ரிவால்வரைக் கீழே போட்டான்.

''சுப்பையா!'' என்றான். தொனியில் இழைந்திருந்த மென்மை சுப்பையாவின் தலையைச் சட்டென நிமிரச் செய்தது. அவனு அப்படிக் கூப்பிட்டான்?

''சீக்கிரமாகப் போவோம், வா.''

இதைச் சொல்லிவிட்டு முன்னுல் நடந்தான் வாலிபன். எந்த வாசல் வழியே வெறியனுக, கொலைகாரனுக உள்ளே வந்தானே அதே வாசல் வழியாகவே அவன் மீண்டும் வீதிக்குப் போனுன் — பச்சாத்தாபம் நிறைந்தவனுக, கருணை வடிவினனுக!

ஆஸ்பத்திரி வந்ததும் இருவரும் இறங்கி உள்ளே போனுர்கள். மலாய் வாலிபனின் மனமாற்றம் கவலைக்கு மத்தியிலும் சுப்பையாவுக்கு ஒரு உற்சாகத்தைக் கொடுத்திருந்தது.

உற்சாகத்துக்கு எதிராக உள்ளே ஒரு சேதி காத்திருந்தது.

அழகிய ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுத்த கலைகா கண்ணை மூடி விட்டாள்.

''கலைகா!'' என்று பெரிதாக அலறியே விட்டான் சுப்பையா.

குலுங்கி அசைந்தது குன்று போன்ற வலிமை நிறைந்த கப்பையாவின் உடல். எதற்கும் பயப்படாதவன், யாருக்காகவும் அழாதவன் அங்கே ஆறெனக் கண்ணீர் பெருக்கி நின்றான். பக்கத்தில் நின்ற மலாய் வாலிபனும் அழுதான். கல்லையும் கசிந்துருக வைத்தது கலைகாவின் சாவு!

போவதற்கு முன் இரண்டு காரியத்தை முடித்து விட்டுத்தான் போனாள் கலைகா. கப்பையாவை ஒரு குழந்தைக்குத் தகப்பனாக்கினாள். தான் அடைந்த தாய்மைப் பேற்றால் அந்த மலாய் வாலிபனை மனிதனாக்கி விட்டாள்!

*

"சீலோசனா! நீ ஆட்சேபிக்கலாம் என்று தான் கொஞ்சம் தயங்கினேன்" என்றான் அந்த வாலிபன்.

"நான் எதற்கு ஆட்சேபிக்கிறேன், நீங்கள் கூட்டியும் குறைத்தும் எழுதியிருந்தால்தானே அப்படி?"

"எத்தனையோ கதைகளை நான் எழுதி விட்டேன். ஆனாலும் இந்தக் கதையையும் எழுத வேண்டுமென்று ஒரு ஆசை இருந்தது. எழுதி விட்டேன். பாத்திரங்களின் பெயரைக்கூட மாற்றவில்லை. சம்பவங்களிலும் என் கற்பனையைக் கலக்கவே இல்லை. நீ சம்மதித்தால் இதை வெளியிட ஏற்பாடு செய்வேன். இல்லையென்றால்?......"

கலோசனாவின் எழுத்தாள மணவாளன், உலகநாதன் வாக்கியத்தை முடிக்க வில்லை. கலோசனாவையே பார்த்தான்.

"அத்தான்! அப்பா எனக்காகவே உயிர் வாழ்ந்தார்கள். அவர் மனத்துக்குப் பிடித்த மருமகனாகத் தாங்கள் வந்தீர்கள். எனக்கும் வாழ்வு தந்தீர்கள். உங்கள் எழுத்தின் மூலம் அப்பாவின் கதைக்கு அமரத்துவம் அல்லவா கொடுத்திருக்கிறீர்கள்? நன்றாகப் பிரசுரியுங்கள். அப்பாவின் சார்பாக அதை நான் வரவேற்பேன்" என்றாள் கலோசனா. நன்றி நிறைந்திருந்தது அவள் குரலில்.

"சிறந்த நட்பு, அதைவிட மிகவும் சிறந்த காதல் இதற்குச் சான்று இந்தக் கதை. கடைசி விநாடியில் ஒரு மிருகத்தை மனிதனாக்கியது அந்தச் சான்றுக்குச் சரியான ஆதார விளக்கம்." உலகநாதன் பெருமிதத்தோடு இதைச் சொன்னான்.

யாரைப் பற்றி, யாருடைய கதையைப் பற்றி இவர்கள் பேசிக் கொள்கிறார்கள்?

இருவரும் பேசிக் கொண்டது 'பாக்ஸிங் கப்பையா' கதையைத்தான். உலகநாதன் தான் அதை எழுதியிருந்தான்.

கலோசனா யார் தெரியுமா?

பாக்ஸிங் கப்பையாவின் மகளே அவள்!

இருபது வருஷங்களுக்கு முன் பினாங்கு ஆஸ்பத்திரி ஒன்றில் கலைகா பெற்றுக்கொடுத்தாளே அவளேதான்.

# தலைநகரில் விருது விழா

சுப்புடு

பொன்னான புதன்கிழமை, மார்ச் பன்னிரண்டாம் தேதி தேசிய பௌதிக ஆராய்ச்சிக் கழகத்தின் விஞ்ஞான மன்றத்தில் வருடாந்திர விருது விழா நடைபெற்றது. பல துறைகளிலுள்ள லலித கலைவிற்பன்னர்களுக்கு சங்கீத நாடக அகாடமியார் கேடயங்களும் சால்வைகளும் அளித்துக் கௌரவித்தார்கள்.

தென்னாட்டிலிருந்து வந்த நிறைகுடம் போன்ற செம்பை வைத்தியநாத பாகவதரும் பழுத்து நரைத்த பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளும் முறையே சால்வையும், தங்கக் காப்பும், சன்னதும் பெற்றார்கள். வடநாட்டு வித்வான்களில் முக்கியமாக, திரையுலகைச் சேர்ந்த ஸ்ரீமதி துர்க்காபாய் கோடேயும் திரை சங்கீத டைரக்டர் சச்சின் தேவ் பர்மனும், சபையோரின் பலத்த ஆரவாரத்துக் கிடையே விருது பெற்றார்கள்.

துர்க்கா கோடே ஊமைப்பட நாட்களில் இருந்தே நிழலை நம்பிப் பிழைத்தவர். கீர்த்தி அவரை நிழல் போலத் தொடர்ந்து வந்து அகாடமியார் கவனத்தைக் கவர்ந்தது சாலச் சிறந்ததாயிருந்தது. பர்மனின் வர்ண மெட்டுகளே அவர் கியாதிக்குக் காரணம்.

: விருதுகள் செம்பை வைத்தியநாத பாகவதருக்குப் பொருந்தினால் போல வேறு யாருக்கும் பொருந்தவில்லை என்பது வெளிப்படை. இதர வித்வான்களுக்குப் போர்த்திய சால்வைகள் பாதங்கள் வரை புரண்டன; ஆனால் செம்பைக்கு முழங்கால் வரைகூட வரவில்லை. நிறைந்த சாரீரத்துக்கு ஏற்ற பரந்த சரீரம்.

தலைமை தாங்கிய உப ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் மணியான ஒரு காலே அரைக்கால் மணிப் பிரசங்கம் செய்தார். ''ஏற்றிப் போற்றிப் பேண வேண்டிய கலைகள் பாரதத்தில் இடையே க்ஷீணமடைந்தன. அகாடமியாரின் இம் முயற்சி கலைகளுக்குச் சற்றுப் புத்துயிர் அளிக்கின்றது. அதற்கு என் ஆசி.''

விருது விழா முடிந்த கையோடு விற்பன்னர்கள் தமது வித்தைகளை அரங்கேற்றினார்கள். எழுபது வயது நிரம்பிய மகாராஷ்டிர வாய்ப்பாட்டுக்காரர் பெஹரே முப்பது வயது குமரனுக்குள்ள குரலுடனும் துடிப்புடனும் பாடியது அசாத்தியமாயிருந்தது. பூதலூர் சாஸ்திரிகள் துல்லியமான சங்கராபரண ராக ஆலாபனையை அடுத்து, தியாகராஜ கிருதி ஒன்றை வாசித்தார். டில்லி சிதோஷ்ணம் வாத்தியத்தின் பிரடையை ஓரளவு சோதனை செய்தும், அவர் சமாளித்துக் கொண்டார்.

செம்பையார் பக்கவாத்தியமும், பின்பாட்டுமாகச் சேர்ந்து ஒரு பட்டாளத்தையே மேடைமீது கொண்டு வந்து விட்டார். எண்ணிக் கொள்ளுங்கள். ஒரு மிருதங்கம், கஞ்சிரா, கடம், இரண்டு பின்பாட்டு, பாகவதர்வாளும், பிடில்காரருமாய்ச் சேர்ந்து மேடையை அலங்கரித்தனர். 'ரகுவர' பாடி ஒரு அவுட்டு ஸ்வரம் அடித்திருக்கிறார் பாருங்கள். இந்த வடக்கத்திக் கூட்டம் அசந்து போய்விட்டது.

திரு சாந்து பணிக்கரின் கதகளி ஆட்டம் பாவ பூர்வமாயிருந்தது. ராவண கர்வ பங்கம் தத்ரூபம். பின்பாட்டும் செண்டையும் கொஞ்சம் பலமாக அமைந்து விடவே விருந்து கண்ணுக்கு மாத்திரமே இருந்தது. சச்சின் தேவ் பர்மன் தலையிலே கையை வைத்துக் கொண்டு ஒரு ''சுகம் சங்கீதம்'' பாடியதோடு, விழா மங்களமாய் முடிந்தது.



உப ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் செம்பை வைத்தியநாத பாகவதர் அவர்களுக்கும் பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகளுக்கும் விருதுகள் வழங்குகிறார்.

## 6

திடீரென்று எதிர்பாராதது நடந்தது. மிடுக்குடன் உள்ளே வந்த கான்ஸ்டபிள் தன் கையில் கொண்டு வந்திருந்த திருமணப் பரிசுப் பொருளை இளங்கோவனுக்கு முன்னால் வைத்து விட்டு வணங்கினார். ''தாங்கள் திருமணம் புரிந்து கொண்ட செய்தியை நேற்று கோயிலில் கேள்விப்பட்டேன். உடனே ஓடோடி வந்தேன், தங்களைப் பார்க்க'' என்றார்.

இளங்கோவனுக்கும் மலர்விழிக்கும் அவர்களுடன் இருந்த மற்ற எல்லாருக்கும் ஒன்றும் புரியவில்லை. ஒரே வியப்பில் மூழ்கிக் கிடந்தார்கள். கான்ஸ்டபிள் பேச ஆரம்பித்தார்:

''ஐயா! நான் தங்களால் முன்னுக்கு வந்தவன். தங்கள் கதைகளைப் படித்து அதில் பொதிந்து கிடக்கும் கருத்துக்களால் மனம் மாறியவன். நான் வெறும் ஊர் சுற்றியாக வீட்டுக்கு அடங்காப் பிள்ளையாகச் சுற்றிக்கொண்டிருந்தேன். வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் என்னை ஏதாவது வேலைக்குப் போக வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். ஆனால் நான் சோம்பேறியாக, அவர்களுக்குப் பாரமாக இருந்து வந்தேன். எனக்குக் கதைகள் படிப்பதிலே ஆசை. அந்த ஆசை காரணமாகத் தங்கள் கதைகளைப் படித்து வந்தேன். அது எனக்குத் தன்நம்பிக்கையையும், உழைப்பின் பெருமையையும் உணர்த்தியது. சாதாரணமாக ஊர் சுற்றிக் கொண்டிருந்த நான் இன்று கடமை உணர்ச்சியுள்ள கான்ஸ்டபிளாக மாறிவிட்டேன். என் உற்றார் உறவினர் என்னைப் போற்றிப் புகழ்கின்றனர். இதற்குக் காரணமான தங்களைக் காண வேண்டும் என்று நான் பலநாட்கள் முயன்றிருக்கிறேன். ஆனால் தங்களை இந்தச் சமயத்தில் பார்க்கக் கொடுத்து வைத்ததில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. தயவுசெய்து தாங்களும்

# பொன்னி எங்கே?

தங்கள் மனைவியும் இந்தப் புத்தகத்தில் கையெழுத்துப் போட்டு என்னை ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று சொல்லி இளங்கோவன் எழுதிய 'உழைப்பின் பெருமை' என்ற அற்புதமான புத்தகத்தை நீட்டினார் கான்ஸ்டபிள்.

அதில் மலர்விழியும் இளங்கோவனும் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தனர். கான்ஸ்டபிள் மிகுந்த நன்றியுணர்ச்சியுடன் அந்தப் புத்தகத்தை வாங்கிக் கொண்டு அவர்களிடம் விடைபெற்றுச் சென்றார்.

அவர் சென்றபிறகு சற்று நேரம் அந்தக் கான்ஸ்டபிளைப் பற்றியும் அவருக்கு இருந்த நன்றி உணர்ச்சியைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தனர். ''கான்ஸ்டபிள்கள் எல்லாரும் இப்படி இலக்கிய உணர்வு பெற்று விட்டால் இந்த நாடே நலம் பெற்று விடும்'' என்றார் தமிழ் ஆசிரியர்.

எங்கோ சுற்றிக்கொண்டிருந்த பேச்சு வீரப்பனிடம் மீண்டும் வந்து சேர்ந்தது.

''ஆமாம்; வீரப்பன் பிறகு என்ன ஆனான்? யார் அந்தப் பெண்?'' என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான் இளங்கோவன்.

''ஆ! அந்தக் கதையை நீங்கள் எல்லாரும் கேட்க வேண்டும்'' என்று உணர்ச்சி பொங்கக் கத்தினான் சேது.

சேதுவின் கறுத்த தலைமயிர் சுருள் சுருளாக அவன் நெற்றியில் தொங்கிக் கொண்டிருந்தது. அதை அடிக்கடி தள்ளி விட்டுக் கொண்டே பேசினான். அவன் கண்கள் நட்சத்திரங்களைப் போல் ஜொலித்தன. அவனது புன்சிரிப்போ அவனது வெற்றியின் பெருமையை எடுத்துக் காட்டும் சூரியனைப் போல் இருந்தது. வெற்றி வீரனைப் போல் அவன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு பேசினான். சிரித்தபோது அவனுடைய பற்கள் பிரகாசித்தன.

''இளங்கோவே! உங்களை நினைத்து விட்டாலே எனக்கு ஒரு புது சக்தி தோன்றி விடுகிறது. அது பெருமைப்பட



வேண்டிய விஷயம் தான். வீரப்பன் வெறும் முரடனாக இருந்தாலும் நல்லவன்தான் என்று எண்ணவேண்டியிருக்கிறது'' என்றான் சேது.

''நல்ல விஷயங்களையோ, ஒரு மனிதனிடம் உள்ள நல்ல குணத்தையோ வியந்து பாராட்டுபவர்கள் உலகத்தில் நிறைய இருப்பதில்லை. உன்னிடம் இந்தக் குணம் இருப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுக்கிறது. உலகில் எல்லாருமே நல்லவர்கள்தான். எந்த ஒரு விஷயத்தையும் எதிரிகள் இதயத்தில் இருந்து பரிவு உணர்ச்சியுடன் பார்த்தால் விஷயம் விளங்கி விடும். வீரப்பனும் மனிதன்தானே! அவனுக்கும் இதயம் என்று ஒன்று உண்டு அல்லவா? அதன் உணர்ச்சியைப் புரிந்து கொள்ளும்படி செய்து விட்டால் அவனும் நல்லவனாக மாறித்தான் ஆக வேண்டும்!'' என்றான் இளங்கோவன்.

''நீங்கள் சொல்லுவது முற்றிலும் உண்மை. தெரிந்தோ தெரியாமலோ வீரப்பனுடைய நல்ல குணத்தைத் தூண்டி ஆகிவிட்டது'' என்று சொல்லிச் சேது வீரப்பனைப் பற்றிய ரஸமான கதையைச் சொல்ல ஆரம்பித்தான்.

எல்லாரும் அவன் சொல்லுவதை ஆவலுடன் கேட்க ஆரம்பித்தனர்.

''அன்று வீரப்பனும் அவன் ஆட்களும் போட்ட சதித் திட்டங்களைப் புரிந்து கொண்ட உடனேயே வீரப்பனின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினேன். அவன் வெறும் முரடன். அவனை அறிவால் வென்றுவிடலாம் என்று எனக்கு நன்றாகத் தெரியும். அதனால் என் அறிவின் சக்தியை உபயோகிக்கத் தொடங்கினேன். வீரப்பன் பூங்கொடி என்ற பெண்ணைக் காதலித்து வந்தான். அவளைக் கல்யாணம் செய்து கொள்வதாகவும் வாக்களித்துத் திருமணத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தான். இதைப் பூங்கொடியின் தந்தை ஒருநாள் என்னிடம் சொன்னார். இதைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'அடபாவி! ஒரே சமயத்தில் இரண்டு பெண்களின் வாழ்க்கையையா பாழாக்கப் பார்க்கிறாய்!' என்று எண்ணிக் கொண்டேன். பெரியசாமியைப் பயமுறுத்தி மலர்விழியைத் தனக்குக் கல்யாணம் செய்து கொடுக்கும்படியும் செய்துவிட்டான். இளங்கோவனுக்கும் எனக்கும் தெரியாமல் மலர்விழியை அழைத்துக்கொண்டு போய்த் தஞ்சாவூர் மாரியம்மன் கோவிலில் திருமணம் செய்து கொண்டு விடுவது என்று ஏற்பாடு செய்திருந்தான். இதையும் தெரிந்து கொண்டேன். முதல் நாளே பூங்கொடியின் தந்தையை மாரியம்மன் கோயிலுக்கு அனுப்பி வைத்தேன். மலர்விழிக்குப் பதிலாகப் பூங்கொடியைக் காரில் ஏற்றி அனுப்பி வைத்தேன். மாரியம்மன் கோவிலுக்குப் போகும்வரையில் வீரப்பன் பூங்கொடியிடம் ஒன்றுமே பேசவில்லை. பொழுதுபுலர்ந்தால் கல்யாணம்தான் ஆகப் போகிறதே என்று எண்ணிப் பேசாமல் இருந்திருக்கிறான். பூங்கொடியின் தந்தை தனக்கு வேண்டிய ஆட்களுடன் மாரியம்மன் கோயிலில் தயாராக இருந்தார். வீரப்பன் கார் அங்கு சென்றதும் மிகுந்த ஆசையுடன் தன் அருகில் இருக்கும் பெண்ணைப் பார்த்தான். அப்பொழுதுதான் அவனுக்கு விஷயம் வெளியாயிற்று. அதற்குள் பூங்கொடியின் தந்தை கார் அருகில் வந்து கதவைத் திறந்தார். 'என்ன மாப்பிள்ளை, எனக்குத் தெரியாமலேயே திருமணத்துக்கு ஏற்பாடு செய்து விட்டீர்களே! என்னிடம் சொன்னால் நான் என்ன சொல்லப் போகிறேன்?' என்று சொல்லிச் சிரித்தார். வீரப்பன் பயத்துடன் 'திருதிரு' வென்று விழித்தான்.



அவனுக்கு உலகமே சுழலத் தொடங்கி விட்டது. உடலெல்லாம் வியர்த்துவிட்டது. தான் தனிமையில் இருப்பதையும் பூங்கொடியின் தந்தை ஆள் பலத்துடனே இருப்பதையும் தெரிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்கவில்லை. ஒருமாதிரி தன்னைச் சுதாரித்துக் கொண்டான். 'நான் புறப்படும்போது உங்களைப் பார்த்தேன். நீங்கள் இல்லை. ஊரில் பலர் இந்தக் கல்யாணம் நடப்பதை விரும்பவில்லை என்று அறிந்தேன். அதனால் ஊருக்குள் நம் கல்யாணம் வேண்டாமே என்று எண்ணினேன்' என்று ஏதோ வாயில் வந்ததைச் சொல்லி மழுப்பினான். வேறு வழியின்றித் தவியாய்த் தவித்தான். பூங்கொடியின் தந்தை ஒன்றையும் காண்பித்துக் கொள்ளவில்லை. எப்படியாவது தன் மகளுக்குத் திருமணம் நடைபெற்றால் சரி என்று காரியத்திலேயே கண்ணாய் இருந்தார். நல்ல சுப முகூர்த்தத்தில் பூங்கொடிக்கும் வீரப்பனுக்கும் மாரியம்மன் சந்நிதியில் சிறப்பாகக் கல்யாணம் நடைபெற்றது. வீரப்பனுக்கும் ஒரு விதத்தில் சந்தோஷம்தான். 'இந்த அருமையான பூங்கொடியை விட்டு விட்டு மலர்விழியைச் சுற்றி அலைந்தேனே!' என்று சொல்லி மகிழ்ந்தானாம்.

இதைக் கேட்டதும் இளங்கோவனும் மலர்விழியும் விழுந்து விழுந்து சிரித்தார்கள். அவர்கள் மனத்திலே இதுவரையில் இருந்து வந்த ஒரு பெரியபாரம் இறங்கிவிட்டது போல் வயிறு குலுங்கச் சிரித்தார்கள். மனம்விட்டுச் சிரித்தார்கள்.





''வீரப்பன் கதை தீர்ந்தது! அவன் எப்படியாவது இருந்துவிட்டுப் போகட்டும்! ஆனாலும் அவன் பொல்லாதவன். இங்குவந்து தொல்லை கொடுத்தாலும் கொடுப்பான்!'' என்று பயமாக இருக்கிறது என்றார் பெரியசாமி. அவருடைய முகத்திலே கவலை படர்ந்தது.

நீங்கள் அதற்கு ஒன்றும் கவலைப்பட வேண்டாம். இளங்கோவனுக்கு மலேயாவில் ஒரு பெரிய வேலை கிடைத்திருக்கிறது. அவனையும் மலர்விழியையும் அடுத்த மாதம் நான் மலேயாவுக்கு அனுப்பி வைக்கப் போகிறேன்'' என்றார் தமிழ் ஆசிரியர்.

''என்ன, மலேயாவுக்கா?'' என்று எல்லாரும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.

''ஆமாம்!'' என்றார் தமிழ் ஆசிரியர்.

இளங்கோவனும் இப்பொழுதுதான் இந்தச்செய்தியைக் கேட்டான். அதனால் அவன் முகத்தில் வியப்பும் மகிழ்ச்சியும் அதிகமாகத் தெரிந்தன. மலர்விழி வீரப்பன் தொல்லையிலிருந்து விடுபட்டு மலேயா போவதை எண்ணி உண்மையிலேயே மகிழ்ந்தாள்.

அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. இளங்கோவனைப் பார்த்தாள். புன்முறுவல் பூத்தாள். தந்தை பெரியசாமியைப் பார்த்தாள். சேதுவையும் தமிழ் ஆசிரியரையும் கருணை பொங்கப் பார்த்தாள்.

மலர்விழியின் இந்தப் புது உற்சாகத்தை உணர்ந்து கொண்ட இளங்கோவன் மனத்துக்குள்ளாகவே அதை எண்ணி வியந்து கொண்டிருந்தான்.

''இளங்கோவா!'' என்று அன்புடன் அவனைக் கூப்பிட்டார் தமிழ் ஆசிரியர். மெதுவாக அவர் பக்கம் திரும்பினான் இளங்கோவன். கண்களைக் கசித்துக் கொண்டு தமிழ் ஆசிரியரைப் பார்த்தான்.

சற்று நேரம் ஏதோ சிந்தனையில் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

"ஐயா!" என்றான்.

"மலேயா போவதில் உனக்கு விருப்பம் தானே! உனக்குப் பிடித்தமான தொழிலில் தான் உன்னை அமர்த்தப் போகிறேன். என்னுடைய நண்பர் புதிதாக ஒரு பத்திரிகை ஆரம்பித்திருக்கிறார். அதற்கு உன்னை ஆசிரியராக அமர்த்தப் போகிறேன்" என்றார்.

இளங்கோவன் தமிழ் ஆசிரியரைப் பார்த்தான். அவருடைய கருணைபொழியும் முகத்தைப் பார்த்தான். திடீரென்று ஏற்பட்ட மகிழ்ச்சிப் பெருக்கால் எழுந்த புன்முறுவல் இளங்கோவன் முகத்தைப் பிரகாசிக்கச் செய்தது. தன் வாழ்க்கையை எப்படித் தொடங்கினான் என்பதை அப்பொழுது எண்ணிப் பார்த்தான். தொடர்ந்துவந்த வாழ்வைவிட, தொடங்க இருக்கும் வாழ்வு மிகச் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை.

"உனக்கு மலேயா போவதில் சந்தோஷம் தானே?" என்றார் தமிழ் ஆசிரியர்.

"நீங்கள் கொடுத்ததுதானே இந்தவாழ்வு! மலேயாவுக்கு என்ன? தமிழ்த் தொண்டுக்காக யமலோகத்துக்கே போகச் சொன்னாலும் மகிழ்ச்சியோடு போவேன்" என்றான்.

தமிழ் ஆசிரியர் புன்முறுவல் பூத்தார். "அடுத்த கப்பலுக்கு மலேயாவுக்குப் புறப்படத் தயாராக இருக்கவேண்டும்" என்றார்.

பெரியசாமி, சேது எல்லாருமே மலர்விழியும் இளங்கோவனும் மலேயாவுக்குச் செல்லும் நல்ல நாளை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தனர்.

பின்னால் நடக்கப் போகும் பயங்கரங்களை எண்ணிப் பார்க்காமலே அவர்கள் எல்லாரும் மகிழ்ச்சியுடன் இருந்தனர்.

அங்கு திடீரென மௌனம் குடிகொண்டது.

அவர்கள் விட்ட மூச்சு எங்கேயோ அடிக்கும் பயங்கரச் சூறாவளிபோல் மலர்விழியின் காதுகளில் கேட்டது. மலர்விழி தன்னுடைய காதுகளைப் பொத்திக் கொண்டாள்.

*** *** ***

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. இளங்கோவனுக்குத் திருமணம் ஆன செய்தி எப்படியோ அவனுடைய ரஸிகர்களுக்கெல்லாம் தெரிந்து விட்டது. ஆண்களும் பெண்களுமாகத் தினம் தினம்வந்து அவனை வாழ்த்தினார்கள். மலர்விழியின் பாக்கியத்தை வியந்து பாராட்டி விட்டுச் சென்றார்கள். மலர்விழி இப்பொழுதுதான் தன் கணவருடைய பெருமையை எண்ணிப் பெருமைப்பட ஆரம்பித்தாள். அவளுக்கு இப்பொழுதெல்லாம் இளங்கோவனிடம் அன்பைவிடப் பக்தியும் மரியாதையுமே அதிகமாகி விட்டன. இந்த மாறுதலை ஒருவாறு இளங்கோவனும் புரிந்துகொண்டு மனத்துக்குள் மகிழ்ந்து கொண்டான். முன்னிலும் அதிகமாக மலர்விழியுடன் நெருங்கிப் பழக ஆரம்பித்தான். அவன் அதிகமாக அன்பு செலுத்தச் செலுத்த மலர்விழி தெய்வத்தின் சந்நிதியில் நிற்கும் பக்தனாக இளங்கோவன்முன்னால் நின்று வழிபட ஆரம்பித்து விட்டாள்.



மாதம் ஒன்று ஓடி மறைந்து விட்டது. இளங்கோவன் மலேயாவுக்குச் செல்லும் நாளும் வந்துவிட்டது. மலேயாவுக்குச் செல்வதற்கு முன்னால் சென்னையில் இருந்த தன்னுடைய வீடு வாசல் எல்லாவற்றையும் மலர்விழியின் தந்தையிடம் ஒப்புவித்தான். தன்னுடைய எல்லாக் காரியங்களையும் ஒருவாறு ஒழுங்கு செய்துகொண்டான்.

தமிழ் நாட்டை விட்டுப் போவது அவன் மனத்துக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனாலும் தமிழ்த் தொண்டுக்காகத்தானே கடல்கடந்து செல்கிறோம் என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டான். தன் நண்பர்கள் ரஸிகர்கள் எல்லோரிடமும் அவன் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டான்.

அவனை வழியனுப்பி வைக்கக் கப்பல் துறைக்குத் தமிழ் ஆசிரியர், அவர் மனைவி, பெரியசாமி,சேது எல்லாருமே வந்திருந்தனர்.

ஆகாயம்] மேகமற்று நீலநிறத்துடன் காட்சி அளித்தது. நீல வானத்திலிருந்து சூரியன் தன்னுடைய பொற் கிரணங்களை நீட்டி, பச்சை நிறக் கடற் பரப்பைக் குனிந்து பார்க்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. நெருக்கமான சென்னைத் துறைமுகத்தில் முன்னும் பின்னும் தள்ளிக்கொண்டு செல்லும் படகுகளின் துடுப்புகள் கடலின் நீரைக் கலக்கி விட்டுக் கொண்டிருந்தன. அதனால் கடலில் சூரியனின் பிரதிபிம்பத்தைக் கண்டு மகிழ முடியவில்லை.

நங்கூரச் சங்கிலிகளின் கலகல ஓசை, மூட்டைகள், பெட்டிகள், தட்டு முட்டுச் சாமான்கள் ஒன்றோடு ஒன்று மோதும்போது உண்டாகும் சத்தம், இரும்புப் படிகளில் தடதடவென்று பிரயாணிகள் ஏறிக் கப்பலுக்குச் செல்லும் சத்தம், கப்பலில் இருந்துவரும் கிரீச்சிடும் ஓசை, காதைத் துளைத்துக் கர்ஜிக்கும் கப்பல் சங்குகளின் அறிவிப்பு அலறல்கள், மாலுமிகள், துறைமுகத் தொழிலாளர்கள் ஆகியவர்களின் உரத்த குரல்கள்—இவையெல்லாம் காதைச் செவிடாக்கும் ஒலியைக் கிளப்பி அலை அலையாய்த் துறைமுகத்துக்கு மேலே எல்லையற்ற வானவெளியில் பரவிக் கொண்டிருந்தன.

அங்கிருந்த கற்கள், இரும்பு, மரம், நீராவிப் படகுகள், மனிதர்கள் எல்லாரும் சேர்ந்து கூச்சலிடும் அந்த ஆரவார ஓசைகளுக்கு மத்தியில் இளங்கோவனும் மலர்விழியும் தங்களை வழியனுப்பவந்த தமிழ் ஆசிரியரிடம் இருந்தும் அவர் மனைவி, பெரியசாமி, சேது ஆகியவர்களிடமிருந்தும் விடைபெற்றுக் கொண்டனர். மலர்விழி தன்னுடைய தந்தையைத் தாவி அணைத்துக் கொண்டு கண்ணீர் விட்டாள்.

"என்ன அம்மா! என்னமோ திரும்பியே வராத ஊருக்குப் போவது போல் கண்ணீர் விடுகிறாயே!" என்றார் பெரியசாமி.

''எனக்கு என்னமோ அப்படித்தான் தோன்றுகிறது அப்பா!'' என்று சொல்லி மீண்டும் பெரியசாமியைக் கட்டிக் கொண்டு கதறிக் கதறி அழுதாள் மலர்விழி.

அவள் வாயில் இருந்து ஏன்தான் இப்படிப் பட்ட துக்கிரிச் சொல் வர வேண்டுமோ!

தமிழ் ஆசிரியர் எவ்வளவுதான் தம்முடைய மனத்தைத் தேற்றிக் கொண்டு தைரியமாக இருந்தாலும் அவர் உள்ளத்து வேதனை உணர்ச்சிகளை முகம் தெளிவாகக் காட்டிக் கொண்டே இருந்தது. சேது இளங்கோவனை மார்புறத் தழுவிக் கொண்டான். ''என் வாழ்வை வளமாக்கிய வள்ளலே! எழுத்துலக மன்னரே! உங்களை நான் மறக்க மாட்டேன். நான் மட்டும் இல்லை; என் சந்ததிகள்கூட உங்களைப் போற்றுவார்கள்'' என்று சொல்லி விடை கொடுத்தான். அவன் கண்களும் கலங்கத்தான் செய்தன.

பெரியசாமி தாயில்லாக் குழந்தைபோல் தவிமையில் நின்று கண்ணீர் விட்டுக் கலங்கினார்.

தமிழ் ஆசிரியர் மனைவி மலர்விழியைக் கூப்பிட்டு என்னென்னவோ புத்திமதிகளைக் கூறிக் கொண்டிருந்தாள். இளங்கோவன் இதயத்தை இரும்பாக்கிக் கொண்டிருந்தான். கடைசியில் இளங்கோவனும் மலர்விழியும் எல்லாருடைய பாதங்களிலும் விழுந்து வணங்கினர். பிரியா விடைபெற்றுக் கொண்டு கப்பலுக்குச் சென்று விட்டனர்.

அரக்க ஒலி செய்துகொண்டு, ஒரு பயங்கரப் பெருமூச்சு விட்டுக் கரும் புகையைக் கக்கிக்கொண்டு கப்பல் புறப்பட்டு விட்டது. கப்பல் கண்ணுக்கு மறையும் வரையில் கரையில் இருந்தவர்கள் கைகளை ஆட்டிக் கொண்டே இருந்தனர். கப்பலின் மேல் தளத்திலிருந்து இளங்கோவனும் மலர்விழியும் கைகளைக் காட்டிக் கொண்டிருந்தனர். இளங்கோவன் கண்களுக்கு முன்னால் தமிழ் ஆசிரியரின் கை தெரிந்து கொண்டே இருந்தது. அது மறைவதற்குப் பதிலாக இன்னும் தெளிவாகத் தெரிந்தது. இப்பொழுது அது மிகப் பெரியதாகத் தோன்றியது. அந்தக் கை இளங்கோவனுக்கு ஏற்படப் போகும் ஏதோ ஒரு பெரிய அபாயத்திலிருந்து அவனை விடுவிக்க முயல்வதுபோல இருந்தது.

*** *** ***

மலேயாவில் இளங்கோவன்-மலர்விழியின் வாழ்க்கை இன்பமாகவே கழியத் தொடங்கியது. மலரும் மணமும் போல, மணியும் ஓசையும் போல, நகமும் சதையும்போல, தமிழும் இசையும்போல, வீணையும் நாதமும் போல மலர்விழியும் இளங்கோவனும் மனமொத்துச் சுகமாக வாழ்ந்து வந்தார்கள்.

இளங்கோவன் இப்பொழுது சாதாரண இளங்கோவன் அல்ல. ''வானவில்'' என்ற வாரப்பத்திரிகையின் புகழ் பெற்ற ஆசிரியர். 'வானவில்'லின் ஆசிரியர் பதவியை அவன் ஏற்றுக் கொண்டவுடனேயே அந்தப் பத்திரிகையின் புகழ் ஓங்கத் தொடங்கி விட்டது. வானவில்லில் இளங்கோவன் ஹாஸ்ய நாடகங்கள் எழுதினான். சிறுகதைகள் எழுதினான். அரசியல் தலையங்கம் எழுதினான். இப்படி அவன் இரவு பகலாக வானவில்லின் வளர்ச்சியில் ஈடுபட ஆரம்பித்து விட்டான்.

புகழ் அவனைத் தேடி வரத் தொடங்கியது. புகழில் ருசி ஏற்பட்டவுடன் அதைத் தொடர்ந்து மேலும் மேலும் வளர்த்துக் கொள்ள ஆரம்பித்து விட்டான். மிகுந்த வேதனையுடன் இரவு என்றும் பகல் என்றும் பாராமல் ஹாஸ்ய நாடகங்களை, நகைச்சுவைக் கதைகளை எழுதிக் குவித்தான்.

வீட்டில் எப்பொழுது பார்த்தாலும் இளங்கோவனுக்குப் படிப்பும் எழுத்தும்தான். அவன் மலர்விழியை மறந்தே விட்டான் என்றுகூடச் சொல்லலாம். நேரம் காலம் தெரியாமல் எழுதிக் கொண்டிருந்தான். இடுப்பில் கையை ஊன்றியவண்ணம் மார்பை நிமிர்த்திக் கொண்டு அவன் எழுதும்போது அவன் எதிரில் என்ன நடக்கிறது என்றே அவனுக்குத் தெரியாது. இந்தமாதிரி சாப்பாட்டையும் மறந்து இளங்கோவன் எழுதிக் கொண்டிருக்கும் போது மலர்விழி புன்னகை செய்து கொண்டு அவனிடம் மெதுவாக வருவாள். ''சாப்பாட்டுக்கு நேரமாகி விட்டது'' என்று நிதானமாகச் சொல்ல ஆரம்பிப்பாள்.

சிரிக்கச் சிரிக்கக் கதைகள் எழுதும் இளங்கோவன் மலர்விழியின்மீது சீறி விழுவான். ''போ! இங்கிருந்து போய்விடு! நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று தெரியவில்லையா? என்னைத் தொல்லைப்படுத்தாதே! எனக்குச் சாப்பிடத் தெரியும்'' என்று என்னென்னவோ சொல்வான்.

மலர்விழி அநாதைக் குழந்தைபோல அங்கிருந்து போய்விடுவாள். தன்னிடம் கொஞ்சிக் கொஞ்சிப் பேசிய இளங்கோவனா இப்படி எரிந்து விழுகிறார் என்று எண்ணி வேதனைப் படுவாள். ஒளியிழந்த விளக்கு போல அவள் முகம் சோபை இழந்து கறுத்து விடும்.

இளங்கோவன் பத்திரிகைத் தொழிலில் முழுமூச்சுடன் ஈடுபட ஆரம்பித்ததும் அடியோடு மாறியே போய் விட்டான். அவன் முகத்தில் சதா தவழ்ந்து கொண்டிருந்த சிரிப்பு மறைந்து விட்டது. யாரைக் கண்டாலும் எரிந்துவிழ ஆரம்பித்தான். வீட்டு வேலைக்காரர்களைக் கண்டால் துரத்துவான். யாராவது ஏதாவது கேட்டால் தாறுமாறாகப் பதில் சொல்லிக் கத்துவான்.

''நான் எப்பேர்ப்பட்ட ஹாஸ்யக் கதை எழுதிக் கொண்டிருக்கிறேன். இதன் உயர்வை யாரும் உணர்ந்து கொள்ளவில்லையே?'' என்று மனத்துக்குள் சொல்லிக் கொள்வான்.

இந்த மாதிரி சூழ்நிலையில் நாளுக்கு நாள் அவன் கீர்த்தி உயர்ந்தது! மேலும் மேலும் உற்சாகத்துடன் எழுதலானான்.

'வானவில்' பத்திரிகையும் அதன் ஆசிரியர் இளங்கோவனும் மக்கள் மத்தியில் ஒரு நிலையான இடத்தைப் பிடித்துக் கொண்டனர். வாரந்தோறும் வானவில்லை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர்.

இளங்கோவன் எழுத்தில் இன்னும் சூடு பிடிக்கும் சம்பவம் நிகழ ஆரம்பித்து விட்டது. அமைதியான வானத்தில் யுத்த மேகம்

கள் சூழ்ந்து குமுறத் தொடங்கின. மலேயா யுத்த பூமியாகப் பிரகடனப்படுத்தப் பட்டது. இந்தச் சமயங்களில் இளங்கோவன் கதை கட்டுரை நாடகங்கள் எழுதுவதை நிறுத்தி வைத்தான். அரசியல் விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்தி எழுதலானான்.

வானவில்லின் நிறங்களில் கனல் பொறி பறக்கும். மலேயாவை அடக்கி ஆண்ட அந்நிய சர்க்காரை மிகுந்த ஆவேசத்துடன் தாக்குவான். அவன் கூறும் காரணங்கள், வாதங்கள் எல்லாமே ஆணித்தரமாக இருக்கும்; அவை அசைக்க முடியாமல் 'பளிச்' 'பளிச்' என்று மின்னும். அவன் எழுத்துச் சக்தி காரணமாக மக்கள் மனத்தில் சுதந்திரத் தீயே கொழுந்து விட்டது. நீண்ட நெடுங்காலமாக ஆட்சி புரிந்து வந்த அரசாங்கம் அவன் சக்தி வாய்ந்த எழுத்தால் ஆடிக் கலகலத்துப் போய்விட்டது.

இந்தக் காலங்களில் இளங்கோவன் முன்னிலும் எழிலுடன் விளங்கினான். அவன் உடம்பு இன்னும் ஒரு சுற்றுப் பருத்தது. ஒரு வெற்றி வீரனுக்கு, அறிவாளிக்கு, அனுபவ மேதைக்கு, தீர்க்கதரிசிக்கு, நல்ல ஞானிக்கு இருக்க வேண்டிய பளபளப்பு அவன் முகத்தில் வீசியது. கண்கள் சுடர் விட்டு ஒளி வீசின. யுத்தச் சூழ்நிலைக்கு மத்தியில் மலேயா மக்களின் வாழ்க்கையை வைத்துக் கொண்டு நடுநடுவே அவன் எழுதிய கதைகளைப் படித்து விட்டு எல்லாரும் விலா வெடிக்கச் சிரித்தார்கள். மலர்விழி விழுந்து விழுந்து சிரிப்பாள்.

இப்பொழுதெல்லாம் இளங்கோவனுக்கு மலர்விழியிடம் கொஞ்ச நேரம் கூடப் பேச முடிவதில்லை. கொஞ்ச நேரம் என்ன? மலர்விழியை ஏதோ உபசாரத்துக்காகப் பார்த்து ஒரு வார்த்தை பேசுவான். அதுகூட ஏதோ சிந்தனையில் தன்னை மறந்த வசத்தில் அவளிடம் பேசிக் கொண்டே இருப்பான். முதலில் மலர்விழி இதையெல்லாம் எண்ணி வேதனைப்பட்டாள். நாளுக்கு நாள் இளங்கோவனுக்கு ஏற்படும் புகழைப் பார்த்துப் பெருமைப் பட்டாள். இளங்கோவனுக்கு மனைவியாக இருப்பதே பெரும் பாக்கியம் என்று எண்ணி மனம் பூரித்துப் போவாள்.

ஆனால் சில சமயங்களில் இளங்கோவனிடம் ஏதாவது பேசவேண்டும் என்று ஆசையுடன் போவாள். அவன் அடுத்த வாரம் எதைப் பற்றி எழுதுவது என்ற கவலையில் மூழ்கிக் கிடப்பான். மலர்விழிக்கு அப்பொழுது இளங்கோவன் முகத்தைப் பார்ப்பதற்கே பயமாக இருக்கும். அவனிடம் நெருங்க மாட்டாள். உலகம் புகழும் இலக்கியங்களைப் படைக்கும் இளங்கோவனைவிட அவன் எழுதியிருக்கும் புத்தகங்களே நல்ல துணை என்று, அவன் எழுதிய புத்தகங்களில் ஏதாவது ஒன்றை எடுத்துக் கொண்டு தனிமையை நாடிச் சென்று விடுவாள் மலர்விழி.

ஒருநாள் இளங்கோவன் ஏதோ நினைத்துக் கொண்டான் மலர்விழியிடம் அவனே வந்தான். "மலர்விழி!" என்று அன்போடு கூப்பிட்டான். இளங்கோவன் மலேயா வந்த பிறகு, பல காலமாக மலர்விழியை அப்படிக் கூப்பிட்டதில்லை. அத்தனை சாவகாசத்துடன் வந்து கொஞ்சியதுமில்லை. ஆதலால் அவள்

அவ்வாறு கூப்பிட்ட உடனேயே மலர்விழி இளங்கோவனின் அருகில் நெருங்கினாள்.

அடுத்த கணம் அப்படியே திகைத்துப்போய் விட்டாள். இளங்கோவன் அவள் கண்ணுக்குச் சாதாரண மனிதனாகத் தோன்றவில்லை. யாரும் அருகில் நெருங்க முடியாத மிகப் பெரிய மனிதனாகக் காட்சியளித்தான். அவன் தலையைச் சூழ வட்டவடிவமான ஒளிமண்டலம் சுடர்விட்டு வீசுவதைக் கண்டாள். அந்த ஒளிவட்டம் அவள் கண்களை மறைத்து விட்டது. இளங்கோவன் அவள் கண்முன்னாலிருந்து மறைந்து போனான்.

அவள் காதுகளில் நீண்டநாள் பழகிய மெல்லிய குரல் ஒன்று கேட்டுக் கொண்டிருந்தது. அடிக்கடி தன்னைத் தொட்டுப் பழகிய அன்புக் கரங்கள் தன்னுடைய கைகளைப் பற்றுவதை உணர்ந்தாள். உடனே புத்துணர்வு பெற்றாள். எதிரில் இளங்கோவன் இல்லை. அவன் காரியாலயத்துக்குப் போய் விட்டான். அடாடா! தன்னிடம் அன்போடு பேசவந்தவரோடு ஒருகண நேரம்கூட முக மலர்ச்சியுடன் மனம் விட்டுப் பேசவில்லையே என்று எண்ணி வேதனைப்பட்டாள். அவள் மனத்துக்குள்ளே இளங்கோவன் தன்னை விட்டு எங்கோ வெகு தொலைவில் போய் விட்டது போலவே ஒரு ஏக்கம் குடிகொண்டு விட்டது. மலர்விழி மனம் சிதறிப் போய் விட்டபடியால் இளங்கோவன் குரலும், அவன் கைகளும் அவளுக்குப் பழகியதாக இருந்தும், அதை உணர்ந்து கொள்ள முடியவில்லை. அத்துடன் மலேயாவில் தினம் தினம் ஏற்பட்டு வந்த குண்டு மழையால் யுத்த பீதியால் மக்கள் மடிந்து கொண்டிருந்த கோரங்களும் மலர்விழியைப் பிரமிக்கச் செய்திருந்தன.

தெருவில் ''வானவில்!'' ''வானவில்!'' என்று ஒரு மலேயச் சிறுவன் கத்திக்கொண்டு சென்றதைக் கேட்டதும்தான் அவள் தன் உணர்வு பெற்றாள். அந்தச் சிறுவனிடமிருந்து வானவில்லைப் பெறுவதற்கு ஏராளமான கைகள் போட்டி போட்டுக் கொண்டிருந்த காட்சியைப் பார்த்தாள். புளகாங்கிதம் அடைந்து போனாள். ''தன் காதலர், அருமைக் கணவர் எழுதி வருவதால் அல்லவா இந்தப் பத்திரிகைக்கு இவ்வளவு புகழ்?'' என்று எண்ணி எண்ணி மகிழ்ந்து போனாள்.

அந்த வாரத்து வானவில்லில் இளங்கோவன் அற்புதமான தலையங்கம் ஒன்று எழுதியிருந்தான். அப்பொழுது நடந்து கொண்டிருந்த யுத்தத்தின் கொடுமைகளைப் படம் பிடித்துக் காட்டியிருந்தான். ராட்சசக் குண்டுகள் தெருவில் செல்லும் குற்றமற்ற மக்களைக் கொன்று குவிக்கும் கொடூரத்தை வர்ணித்திருந்தான். குடி வெறியில் மூழ்கிக் கிடக்கும் சோல்ஜர்கள் எழில்மிக்க இளம் பெண்களைப் படுத்தும் பாதகத்தைப் பத்தி பத்தியாக வர்ணித்திருந்தான்.

இதையெல்லாம் படிக்கும்போது மலர்விழியின் அடிவயிற்றுக்குள் 'பகீர்!' 'பகீர்!' என்று திகில் எடுத்தது. அவளையறியாமலேயே எந்த நேரத்தில் என்ன நிகழுமோ என்று பயம் ஏற்பட்டது. இளங்கோவன் வந்ததும் எப்படியாவது மலேயாவை விட்டுப் புறப்பட்டுச் சென்னைக்குப் போய்விட ஏற்பாடு செய்ய வேண்டும் என்று தீர்மானித்து விட்டாள்.

அவள் தீர்மானத்துக்கு மேலும் துணை புரிவது போலிருந்தது அன்று பெரியசாமியிடமிருந்தும், சேதுவிடமிருந்தும் வந்த கடிதங்கள். அவர்களெல்லாம் ஒரு விஷயத்தைப் பற்றித் தான் தங்கள் கடிதங்களில் வற்புறுத்தி யிருந்தார்கள். "வேலையை ராஜினாமா செய்து விட்டு உடனே ஊருக்கு வரவேண்டியது" என்றே எழுதியிருந்தார்கள். அந்தக் கடிதங்களை வைத்து இளங்கோவன் மனத்தை மாற்றி விடலாம் என்று எண்ணினாள். அதனால் இளங்கோவன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் மலர்விழி. மாதம் பிறந்தால் பெறும் பணத்துக்காகவா இளங்கோவன் 'வானவில்'லில் எழுதிக் கொண்டிருந்தான்? மக்களோடு மக்களாக வாழ்வதற்காக, மக்களுக்குத் தொண்டாற்றுவதற்காகவல்லவா எழுதிக் கொண்டிருந்தான்! தெய்வம் தன்னை இந்தப் பணி செய்வதற்காகவே படைத்ததாக எண்ணி அல்லவா எழுதிக் குவித்துக் கொண்டிருந்தான்?

அன்று நிலைமை மிகவும் மாறிப்போய் விட்டது. யுத்தம் முன்னிலும் உச்சநிலை அடைந்து விட்டது. "டிமர்" "டிமர்" என்று குண்டுகள் பொழிந்தன. எப்பொழுது என்ன நடக்கும் என்று யாராலும் ஒன்றும் சொல்ல முடியாத பயங்கரச் சூழ்நிலை ஏற்பட்டு விட்டது. மலர்விழி வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தாள்.

நகரில் பல இடங்களில் துப்பாக்கிப் பிரயோகம் நடக்கும் சத்தம் கேட்டது. குண்டுகள் எங்கோ வெகு தூரத்தில் சுடப்பட்டுக் காற்றில் கலந்தன. இதுபோன்ற சத்தத்தை அவள் சென்ற பல மாதங்களாகக் கேட்டாலும் இன்று அந்தச் சத்தம் அவளுக்கு மிகுந்த பயத்தைக் கொடுத்து விட்டது.



"ஐயோ! ஏதோ குண்டு விழும் சத்தத்தைப் போல் அல்லவா இருக்கிறது" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் மலர்விழி. அவள் கைகள் அவளை அறியாமல் 'கிடுகிடு' என்று நடுங்க ஆரம்பித்தன. தன் நடுங்கும் கைகளால் தலையைத் தடவிக் கொண்டே காதைத் தீட்டிக் கொண்டு இளங்கோவன் வருகிறான் என்று அவன் காலடிச் சத்தத்தை எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தாள்.

வீட்டு வேலைக்காரன் "அம்மா! சோல்ஜர்கள் நம் வீட்டின்மீது சுடுகிறார்கள்" என்று சொல்லிக் கொண்டே மாடியிலிருந்து 'கடகட' வென்று ஓடிவந்து ஓலமிட்டான்.

மலர்விழி ஜன்னல் அருகே ஓடிச் சென்று அதைத் திறந்தாள். சடசடவென்று அறையில் சத்தம் எதிரொலித்தது. அது துப்பாக்கியின் சத்தம் என்பதை மலர்விழி உணர்ந்து கொண்டாள். திடீரென்று ஒரு குண்டு வானத்திலிருந்து விழுந்து வெடித்தது: கண்ணாடி தொறுங்கிவிழும் சத்தம் கேட்டது. எதிர் வீட்டு ஜன்னலில் நெருப்பு வெளிச்சம் பளிச்சென்று மின்னியது. "கடவுளே!" என்று கத்திக் கொண்டு மலர்விழி தன்னுடைய கண்களை இறுக மூடிக்கொண்டு விட்டாள்.

பிறகு என்ன நடந்தது என்று மலர்விழிக்கு ஒன்றும் தெரியாது. தன்னை யாரோ களீர் என்று சாட்டையால் அடிப்பதைப் போல் வேதனை உண்டாயிற்று. தான் படுக்கையில் படுத்துக் கிடப்பதை உணர்ந்தாள். சட்டென்று படுக்கையை விட்டு எழுந்து தரையில் கால்களை ஊன்றிய வண்ணம் "என்னை இளங்கோவனிடம் அழைத்துப் போ!" என்று வேலைக்காரியைப் பார்த்துக் கத்தினாள்.

வேலைக்காரி ஜன்னலுக்கு வெளியே பார்த்து விட்டு, "நீங்கள் இப்பொழுது எங்கும் போக முடியாது. தெருவில் தீ மூண்டு விட்டது. வெளியில் கிளம்பக் கூடாது" என்றாள்.

"என் இளங்கோவன்? என் இளங்கோவன்?" என்று கதறினாள் மலர்விழி.

"அவர் எங்கேயாவது பத்திரமாக இருப்பார் அம்மா!" என்றாள் வேலைக்காரி.

துப்பாக்கிப் பிரயோகம் நின்று விட்டது: ஆனால் நீண்ட ஓலம் மட்டும் கேட்டுக் கொண்டே இருந்தது. மலர்விழி ஜன்னல் வழியே பார்த்தாள். முரட்டுச் சோல்ஜர்கள் தெரு வழியே பாய்ந்து ஓடுவதைக் கண்டாள். தடதடவென்று வயிற்றைக் கலக்கும் அந்தச் சத்தத்தையும் மீறி ஒரு குரல் கேட்டது.

'வானவில்' பத்திரிகை காரியாலயத்தில் இளங்கோவனுக்குத் துணையாக இருந்தவரும் துணை ஆசிரியர் மலர்விழியின் முன்னால் வந்து நின்று கொண்டிருந்தார். அவர் ஏதோ சொல்ல வாயசைத்தார்; முடியவில்லை. அவர் முகவாய் நடுங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தால் அவரது தலை தானாகவே முறிந்து விழுந்து விடும் போலிருந்தது. அவர் கண் விழிகள் பிதுங்கி இருந்தன. பற்களும் கால்களும் கிடுகிடு வென்று ஆடின. அவரது சட்டை கிழிந்து தோளிலிருந்து தொங்கிக் கொண்டிருந்தது. சட்டையில் ஆங்காங்கு ரத்தக் கறைகள் படிந்திருந்தன.

தம்முடைய தைரியத்தை யெல்லாம் வரவழைத்துக் கொண்டு பேசத் தொடங்கினார்: "ஐயோ, அம்மா!" என்று அலறினார். அந்தக் குரலைத் தொடர்ந்து பழக்கமான இன்னொரு குரலும் உரத்துக் கேட்டது.

"இளங்கோவன் ஜப்பான்காரன் போட்ட குண்டுக்கு இரையாகி விட்டாரம்மா!" என்று மிகுந்த துயரத்துடன் கத்தினார்.

"என்ன! என் இளங்கோவன் குண்டுக்கு இரையாகி விட்டாரா?" என்று பயங்கரமாக அலறினாள் மலர்விழி. தன்னுடைய தலையிலே குண்டு பட்டது போல் துடிதுடித்தாள் மலர்விழி. அவள் எதிரில் இருந்த எல்லாமே சுழல ஆரம்பித்து விட்டன. தான் என்ன செய்கிறோம், என்ன பேசுகிறோம் என்று தெரியாமல் "இளங்கோவே! இளங்கோவே!" என்று அலறிக் கொண்டே

அம்புபட்ட மான் போல் குண்டு மழை பொழியும் வீதியை நோக்கித்துள்ளி ஓடினாள்.

"இச் சமயத்தில் நீங்கள் வெளியே போகக் கூடாது!" என்று யார் யாரோ மலர்விழியைத் தடுத்து நிறுத்தப் பார்த்தனர். அவளை யாராலும் தடுத்து நிறுத்த முடியவில்லை.

இளங்கோவன் அடிபட்டு இறந்து கிடக்கும் இடத்தை நோக்கி விரைந்து ஓடினாள்! ஓடினாள்! ஓடிக் கொண்டே இருந்தாள்!

வழியில் ஏதோ ஒரு உருவத்தின்மீது மோதிக்கொண்டாள். சட்டென்று தடுமாறிக் கீழே விழுந்தாள். விழுந்த வேகத்தில் ஏதோ ஒன்று கண்மீது மோதியதை உணர்ந்தாள். அவள் உதடுகள் துடித்தன. கற்கள் நிறைந்த தரையில் கால்களை ஊன்றி மிஞ்சியிருந்த பலம் அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொண்டு அவள், "இளங்கோவே!" "என் அருமை இளங்கோவே!" என்று அலறினாள்.



ஆவேசம் கொண்டவளைப் போல மலர்விழி வானத்தை அண்ணாந்து பார்த்தாள். "ஐயோ இளங்கோவே, என்னை விட்டுப் போவது உமக்கு அழகா!" என்றாள். "எங்கிருந்தோ வந்தாய். என் இதயத்துக்குள் புகுந்தாய்! எனக்கு வாழ்வளித்தாய்! என் வாழ்க்கையை இன்பப் பூங்காவாக மாற்றினாய்! இன்று என்னைத் தவிக்க விட்டுவிட்டு மறைந்து போனாய்! என் அருமைக் காதலரே! கடல் கடந்த இந்தத் தீவிலே எனக்கு யார் துணை! நான் இனி யாருக்காக உயிர் வாழ்வது? என்னையும் உம்முடன் அழைத்துப் போய் விடும்" என்று நடு வீதியில் நின்று அலறினாள். தலை மயிரைப் பிய்த்துக் கொண்டாள். தரையிலே கிடந்து உருண்டாள்; புரண்டாள். 'ஹோ!' வென்று அழுது துடித்தாள்.

மீண்டும் ஏதோ நினைத்துக் கொண்டாள். 'இளங்கோவே! நீர் எங்கே இருக்கிறீர்? எங்கே இருக்கிறீர்?' என்று கூவிக்கொண்டே அந்தத் தெய்விகப் பைங்கொடி ஓடினாள்.

பார்க்குமிடமெங்கும் அவளுக்கு ஒரே பயங்கரமாகத் தோன்றியது. வழியில் ஒரு இடத்தில் குண்டுக்கு இரையாகிக் கிடந்த மனித உடலைப் பார்த்தாள். ஆவலுடன் அந்த உடலுக்கு அருகில் ஓடினாள். அதன் முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். அது அவள் தேடி வந்த இளங்கோவன் திருமேனியல்ல என்பதை அறிந்ததும் பரிதாபமாக அலறினாள். "ஐயோ! கடவுளே! என் கணவரின் உயிரற்ற உடலையாவது எனக்குக் காட்டக் கூடாதா? எத்தனையோ ஏழைகளின் துயர் துடைக்க எழுத்து எழுத்தாய் எழுதிய அந்தக் கைகளை ஒரு தரம் நான் காணக்கூடாதா? கருணை பொங்கும் அந்தத் திருமுகத்தை ஒருதரம் என் கண்ணால் பார்க்கும்படி செய்ய மாட்டாயா? அன்பு துள்ளும் அந்தக் கண்களை இனி நான் பார்க்கவே முடியாதா? பகவானே! இந்தப் பாவியைப் பார்த்த பிறகுதான் அவர் எத்தனை தொல்லைகளுக்கு ஆளானார்! என்னை இவ்வுலகில் தனியே வைத்து விட்டு அவரை மட்டும் கொண்டு போய்விட்டாயே!" என்று ஓலமிட்டாள்.

மலர்விழியின் பரிதாபமான அலறலுக்கு எதிரொலி செய்வதுபோல் உறுமிற்று வானம். பூமி அதிர்ந்தது. சுழல் காற்று அடித்தது. துப்பாக்கிக் குண்டுகள் பறந்தன.

வெறிபிடித்த சோல்ஜர்கள் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒரு முரடன் கண்களில் மலர்விழி பட்டு விட்டாள். அடுத்த கணம் அந்த வெறியன் புலிபோல் பாய்ந்து மலர்விழியிடம் வந்தான். "ஆ! என் பசுங்கிளியே! பத்தரை மாற்றுத் தங்கமே! குயிலே! மானே! தேனே! மயிலே!" என்று என்னென்னவோ பேசத் தகாத வார்த்தைகளைப் பேசிக் கொண்டே மலர்விழியைக் கட்டிப் பிடித்தான். அடுத்த கணம் அவளை ஒரு குழந்தையை வாரி எடுப்பது போல் எடுத்து அணைத்துக் கொண்டான் அந்த வஞ்சகன்.

மிருக வெறிபிடித்த சோல்ஜரின் இரும்புக் கரங்களிலே அகப்பட்டு மலர்விழி புழுவாய்த் துடித்தாள். அவள் கழுத்து, முகம், தோள் எல்லா இடங்களிலும் ஏதோ மோதுவதை உணர்ந்தாள். 'இளங்கோவே! இளங்கோவே!' என்று தொண்டை கிழியக் கத்தினாள். ஏதேதோ சத்தங்கள், ஒலிகள், விசில்கள், ஆகியவற்றினிடையே எல்லாம் சுழன்று, இருண்டு, கொந்தளிப்பாகி விட்டன. அவள் காது செவிடுபடும்படி அந்த அரக்கனின் காமச்சொற்கள் வந்து விழுந்தன. அவள் மார்பு கனத்தது. மூச்சைப் பிடித்தது. அவள் உடல் துடித்தது. வேதனை தாங்காமல் உடம்பு முழுதும் ஒரே எரிச்சலாயிருந்தது. அவள் சக்தியின்றித் தடுமாறினாள். மாசு படாத மாணிக்கம், இளங்கோவனின் அருமைக் காதலி, மலேயா புகழும் பத்திரிகை ஆசிரியரின் தர்மபத்தினி ஒரு மிருகவெறி பிடித்த சோல்ஜரின் இரும்புப் பிடிக்குள்ளே அநாதையாக, ஆதரவற்றவளாகத் தவியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள். 'ஆ! ஆ!' என்று அழுது துடித்துக் கொண்டிருந்தாள். அவள் புருவங்கள் மேலும் கீழும் ஏறி இறங்கிப் படபடத்தன. கண்கள் திறந்தே இருந்தன. ஆனால் அவள் கண் முன்னால் உள்ள பொருள்களெல்லாம் மறைந்து கொண்டிருந்தன. வானத்தில் இளங்கோவன் மலர்ந்த முகத்துடன் நட்சத்திரம்போல ஜொலித்தான். கைநீட்டி அவளை 'வா!' 'வா' என்று அழைத்தான். 'இதோ வருகிறேன்!' என்று சொல்லிக் கையைத் தூக்கினாள் மலர்விழி. அவளால் கைகளைத் தூக்க முடியவில்லை. இருதயமற்ற சோல்ஜரின் இரும்புக்கரம் பூப்போன்ற மலர்விழியின் உடலை இறுகப் பற்றியிருந்தது. மலர்விழியின் கண் முன்னால் ஒரே இருள் கவிந்து கொண்டுவந்தது. (தொடரும்)

# விசித்திரச் சலங்கை (16)


- கதை -
வாண்டு மாமா
படம் ..... பாபு


தன் இதயம் கவர்ந்தவள் ஒரு இளவரசி என்பதை அறியாத தேவதத்தன் மந்திரியுடன் மகேந்திர புரியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். மல்லிகாவோ, தேவதத்தன் தில்லைப்பாவையை அணியும் போது சலங்கைகள் அடங்காமல் இருக்க வேண்டுமே என்று தவித்தபடி வந்து கொண்டிருந்தாள். சமயத்தில் சலங்கைகள் கைவிட்டு விடுமோ என்று கவலை. அவருக்கு மகேந்திர புரி மக்கள் தேவதத்தனைக் கோலாகலமாக வரவேற்றார்கள்.
















# கனிமரம்

**சாமா**

நல்ல வசந்தகாலம். மரங்களெல்லாம் பூத்துக் குலுங்கிய மலர்களைச் சுற்றித் தேன் வண்டுகள் கூட்டம் கூட்டமாகப் பறந்தன. அது மட்டுமல்லாமல் புஷ்பங்களில் இருக்கும் தேனைப் பருகி விட்டு, மரத்துக்குத் தங்கள் வந்தனத்தைச் செலுத்துவது போல் பாடிய வண்ணம் பறந்து திரிந்து கொண்டிருந்தன.

வண்ண வண்ணப் பறவைகளெல்லாம் மரத்துக்கு மரம் பறந்து சத்தமிட்டுக் கொண்டிருந்தன. மரங்களில் உள்ள பழங்களை அவை சாப்பிடும்போதுதான் என்ன அழகு. 'உங்களையெல்லாம் அனைத்துப் படுத்தத்தான் நாங்கள் காத்திருக்கிறோம்' என்று தழைந்து குனிந்து நிற்பது போல் இருந்தன அம்மரங்கள்.

இந்தச் சூழ்நிலைக்கு மாறுதலாகச் சற்றுத் தூரத்தில் ஒரு தனி மரம் ஏக்கத்துடன் நின்று கொண்டிருந்தது. மரம் என்று பெயர்தானே ஒழிய, அதில் ஒரு இலை கூட இல்லை. வறண்டுபோய் நின்றது.

அந்தத் தனி மரத்தின் ஏக்கத்துக்கு ஏற்ப, "டேய், மொட்டை மரம்! நிற்க நிழலுக்குக் கூட இந்த மரம் பயன்படாது!" என்று மனிதர்கள் சொல்லிக் கொண்டு போனார்கள். பறவைகளோ அதன் பக்கம் எட்டிப் பார்க்கவே பயந்தவை போல், தூர விலகிச் சென்றன.

'என்ன உலகம்! நான் ஏன் பூத்தேன்? என்றால் யாருக்காகிலும் ஒரு பலன் உண்டா? அந்த அழகான பறவைகள் என் கிளையில் ஒரு தடவையேனும் உட்காரும் பாக்கியம் எனக்குக் கிட்டுமா...?......உம்...... இந்த ஜன்மத்தில் இல்லை' என்று ஏங்கிக் கொண்டே இருந்தது, அந்தத் தனி மரம்.

திடீரென்று வானம் இருண்டது. கரு மேகங்களிலிருந்து மழைத் துளிகள் விழுந்தன. இந்த மரத்தின் துக்கத்தைத் தாளாமல் அவை கண்ணீர் விட்டது போல் தான் இருந்தன. மரத்தின் துக்கத்தை அகற்றவே தான் மேகங்கள் தீர்மானித்தன என்பது உடனே தெரிய வந்தது.

சிறு மழையால் பூமி பதப்பட்டு அதிலிருந்து சிறு கொடியுடன் கிளம்பியது, ஒரு திராட்சைக்கொடி. கொஞ்ச நாட்களில் வேகமாகக் கிளம்பிமரத்தை அணைத்துக் கொண்டே மேலே படர்ந்து போய்க் குலைகுலையாய்க் காய்க்கத் தொடங்கியது. அந்த வழியாகப் போகும் ஒவ்வொருவரும் அந்தத் திராட்சைகளைத் தின்று, "ஆஹா! என்ன ருசி! 'இந்தத் திராட்சை புளிக்கும்' என்ற கதையாக இல்லாமல் திராட்சை இப்படித் தித்திக்கிறதே" என்று வாயாரப் புகழ்ந்து கொண்டே போனார்கள்.

திராட்சைக்குத் தினந் தினம் புகழும் பெருமையும் ஏறிக் கொண்டே இருந்தன. ஆனால் அந்தப் பாராட்டுதலை யெல்லாம் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் திராட்சை தன் பாட்டுக்கு மேலும் கொத்துக் கொத்தாகக் குலைகுலையாகக் காய்த்துக் குலுங்கிக் கொண்டிருந்தது.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த தனி மரத்துக்கு மீண்டும் தான் உதவாக்கரையாக இருக்கும் நிலைமை நினைவுக்கு வந்தது. அதற்குத் தன் வாழ்வே கசந்துவிட்டது போல் தோன்றியது. 'வாழ்ந்தால் உலகத்தில் நாலுபேருக்கு உதவியாக வாழ வேண்டும். இல்லாவிட்டால் இந்த உலகத்தில் இருக்கவே கூடாது' என்று தீர்மானித்து விட்டது.

* * *

நல்ல கோடை காலம் வந்து விடவே, திராட்சையின் பெருமை மேலும் உயர்ந்தது. தாகத்தைத் தீர்க்க இது அமிர்தமாக வந்து வாய்த்ததே என்று பாராட்டாத வாய் இல்லை. திராட்சையின் புகழ் ஓங்க ஓங்கத் தனி மரத்துக்குத் தன் தாழ்வு பெரிதாகத் தோன்றலாயிற்று.

"திராட்சையாரே! பார்த்தீரா உங்களுக்கு எவ்வளவு பாராட்டு கிடைக்கிறது? நீங்கள் எல்லோருக்கும் எவ்வளவு உபகாரமாக



இருக்கிறீர்கள்! நானும் இருக்கிறேனே என்றால் யாருக்கு என்ன பிரயோசனம்?'' என்று துயரம் தொண்டையை அடைக்கத் தன்னை நொந்து கொண்டது மரம்.

"இதற்காகவா நீங்கள் இவ்வளவு நாட்களாக மனம் நொந்து போய்த் துயரப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? இதற்காக நீங்கள் மனம் நொந்து கொள்ள வேண்டாம். தாங்கள்தான் உண்மையில் பெரியவர்; பாராட்டுக்குரியவர். தங்களுக்குச் சமாதானம் கூறும் முறையில் இதை நான் சொல்ல வரவில்லை. பாராட்டுதல் அவ்வளவும் தங்களைத்தான் சேரும்; என்னைச் சேராது'' என்று தனது இனிய திராக்ஷை மொழியில் கூறியது திராக்ஷைக் கொடி.

அளவு கடந்த பாராட்டு மொழிகள் கிடைத்தும், அதனால் மனம் மாறிக் கர்வத்துடன் திகழவில்லை திராட்சைக் கொடி.

"என்னைச் சேருமா? ஏன் திராக்ஷையாரே! என்னைக் கேலி கிலி செய்கிறீர்களா, என்ன? வெந்த புண்ணில் வேலிட்ட கதையாகத் தயவுசெய்து என்னைக் குத்திப் பேசாதீர்கள்!'' என்றது மரம் துக்கத்தோடு.

"எனக்குத் தங்கள் சகவாசத்தால் நல்ல வேளையாக அந்தத் துர்க்குணம் படியவில்லை. நான் முளைத்து, கொடி விட்டுப் படருவதற்கு ஆதாரமாக இருந்தது தாங்கள்தானே? இந்த நன்றியை நான் மறக்க முடியுமா? தங்களைப்போல் பெரியவர்களை அண்டிப் பிழைக்கிறவனுக்குப் பாராட்டுதல் ஏற்பட்டால் அது தங்களைத்தானே சேரும்!'' என்று நன்றிப் பெருக்குடன் கூறியது திராட்சை. தனி மரத்துக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை.

இது நாள் வரையில் அதன் மனத்திலே உறுத்திக் கொண்டிருந்த துயரம் அந்தக் கணமே நீங்கி விட்டது. தான் உதவாக் கரை என்ற எண்ணம் அப்பொழுதே அடங்கிப் போய்விட்டது.

'இந்தத் திராக்ஷை இவ்வளவு இனிப்பாயிருப்பதற்குக் காரணம், இதன் அடக்கம் தான். எத்தனை இனிய பெருமையைத் தன்னுள் அடக்கிக் கொண்டு, 'அதன் பெருமையை எனக்குச் சூட்டப் பார்க்கிறது! எல்லோருக்கும் இனிப்பை அள்ளி அள்ளிக் கொடுத்துக் கொண்டு இது நன்றாக இருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்தது.




யானையடியில் உள்ள அபூபக்கர் மியான் தமது மனைவி ரம்ஜானி பீவியுடன் சந்திரனைப் பார்த்துக் கொண்டிருந்தார். தற்செயலாகத் திடீரென்று ரம்ஜானியின் கண்களிலே, ஆகாயத்தில் ஒரு அற்புதப் பொருள் தோன்றியது. அவள் தன் கணவனைக் கூப்பிட்டு, ''பார்த்தீர்களா! ஆகாயத்திலே கட்டாரியைப் போல் அது என்ன பொருள் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது?'' என்று வியப்புடன் கேட்டாள்.

அபூபக்கர் மியான் அதை ஊன்றிக் கவனித்து விட்டு, ''அது கட்டாரியைப் போல் இல்லை; செருப்பைப் போல் அல்லவா தோன்றுகிறது. ஒருவேளை மல்லிக் பாபுவின் வீட்டில் வாண வேடிக்கை விட்டுக் கொண்டிருக்கிறார்களோ, என்னவோ?'' என்றார்.

ஆனால் அபூபக்கரின் அநுமானம் மெய்யாகவில்லை. ஏனெனில், மறுநாள்,—அதற்கு மறுநாள், அதற்கும் மறுநாள், தினமுமே அந்த அற்புதப் பொருள் ஆகாயத்திலே தோன்றத் தொடங்கி விட்டது.

அந்தப் பொருள் வாணங்களைப் போல் இங்கும் அங்கும் ஓடி மறையவில்லை; ஒரே இடத்தில் நிரந்தரமாக நிலைத்து நிற்கவும் இல்லை. சந்திரன், நக்ஷத்திரங்கள் இவற்றைப் போல் உதித்து அஸ்தமிக்கவும் இல்லை.

இதைப் பார்த்துவிட்டு, மடமடவென்று முன்னுக்கு வந்து கொண்டிருந்த ஜோதிஷச் சக்கரவர்த்தி தாரக ஸந்யால் சொன்னார்:—

''ஒருவேளை இது ராகுவாக இருக்கலாம். வரப்போகும் பயங்கர விபத்துக்கு இது முன்னோடியான அறிகுறி என்று வைத்துக் கொள்ளுங்களேன்!''

ஆனால் அவர் சொன்னதற்கு மாறாகக் கண்டனம் வெளியிட்டு விட்டார், ஜோதிஷப் பிரவீண சக்கரவர்த்தி என்று புகழ் பெற்ற சசதர் ஆசாரியர். ''இல்லை. இது கோமுகத்தின் உருவ அமைப்பு கொண்டதாக இருக்கிறது. ராகுவின் உருவம் வட்டவடிவமானது. இது கேது. பெரும் விபத்துக்கு அறிகுறி. கிரஹசாந்திக்காக யாகங்களும் இடைவிடாத ஹரி கீர்த்தனைகளும் நடைபெறுவது மிக மிக முக்கியம்!''

காட்டுத்தீயென இச்செய்தி பரவிவிடவே, எங்கு பார்த்தாலும் பீதி பரவி விட்டது.



தினத்தாள்களில் நாளொரு செய்தியும் பொழுதொரு பீதியுமாகப் பிரசுரமாகத் தொடங்கின.

ஒரு பெரியார் எழுதினார்:—

''இது பறக்கும் தட்டாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. எதிலோ இடித்துக் கொண்டு விட்டதனால் நசுங்கிச் செருப்பைப் போல் தோற்றமளிக்கிறது!''

இன்னொரு அறிஞர் எழுதினார்:—

''இது வால் இல்லாத எரி நக்ஷத்திரமாகத் தோன்றுகிறது. சூரியனை இன்னும் கொஞ்சம் நெருங்கினால், இதற்கு வால் முளைத்துவிடும். அதோடு இது மோதி இந்தப் புவியையே சுக்கு நூறாக்கி விடக்கூடும்!''

தலைமை ஆசிரியர் பெருந்தகையென்று போற்றப்படும் குஞ்சபிஹாரி தலாபத்ர என்பவர் 'ஆசிரியர் கடிதம்' என்னும் தலைப்புக்கு ஒரு கடிதம் எழுதிப் பிரசுரிக்கச் செய்தார்:

''வான வீதியிலே பவனி வரும் இந்தப் பயங்கரப் பாதுகை எந்தப் பெரியாருடையதோ, தெரியவில்லை! யோசித்துப் பார்க்குமிடத்தில் வங்காளத்திலே மகா பண்டிதராக விளங்கிய வித்யாசாகருடையதாக இருக்குமோ என்று தோன்றுகிறது. நடுத்தர கல்விக் குழுவின் அக்கிரமங்களைக் காணச் சகிக்காமல், தேஜஸே உருவான காலஞ்சென்ற அந்த மகா புருஷரின் பொறுமை-அணை பொலபொலத்திருக்கவேண்டும். அதனால், வந்த ஆத்திரத்தில், அவர் தம்மையும் மறந்து தமது ஒரு கால் செருப்பைக் கழற்றிக் கீழே வீசியிருக்க வேண்டும்! அது கூடிய விரைவிலேயே பூமியை நோக்கி வந்து கல்விக் குழுவின் தலையிலே தொப்பென்று விழக் கூடும்.''

சட்டசபை எதிர்க்கட்சியின் முக்கியமான அங்கத்தினராக விளங்கிய விருபாக்ஷ மண்டல் என்பவர் மறுப்பு எழுதினார்:

''இராது. வித்யாசாகரின் செருப்பிலுள்ள முன் பக்கத்துக் கூர் அவ்வளவு நீளமாக இராது. சொர்க்கத்தில் உள்ள பேரறிஞர் டாக்டர் மஹேந்திரலால் சர்க்காரின் செருப்பாகத் தான் இது இருக்க வேண்டும். மருத்துவக் கல்லூரி, ஆஸ்பத்திரி முதலியவற்றின் சீர்கேடுற்ற நிலைமையைக் காணச் சகிக்காமல் அவருக்கு ஆத்திரம் வந்திருக்கலாம். அருகில் வேறு ஒன்றும் கிடைக்காததால், அவர் தமது ஒரு கால் செருப்பைக் கழற்றிக் குறி வைத்து எறிந்திருக்கிறார். இப்பொழுதாவது சம்பந்தப்பட்ட அதிகாரிகள் திருந்தி நல்வழிக்கு வந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் வரும் பலனை அநுபவித்தே ஆகவேண்டியிருக்கும்.'' பக்தகவி ஹேமந்த சட்டராஜ் எழுதினார்:

''வானவீதியில் உலவிவரும் இந்தச்செருப்பு ஒருநாளும் மனிதர்களுடையதாக இருக்க முடியாது. கட்டாயம் தெய்வத்தினுடையதாகத்தான் இருக்க வேண்டும். திருட்டு, புரட்டு, லஞ்சம், வஞ்சம், பொய், புனை

கருட்டு, தூர்நடத்தை, துர்ப்போதனை முதலிய பாவச் செயல்கள் பல்கிப் பெருகிவிட்டன. ராஜ்ய சர்க்கார்கள் செயலாற்றும் திறமை இழந்து சோம்பி உட்கார்ந்து விட்டன. செல்வந்தர்கள் செல்வச் செருக்கிலே இன்ப போகம் துய்க்கவதிலேயே ஈடுபட்டு விட்டனர். சலனப் படங்கள் மக்களின் நல்ல மனத்தைக் கவர்ந்து தீமைக்கு உறைவிடமாக்கி விட்டன. சின்னஞ்சிறு குழந்தைகளைச் சினிமாப் பித்தாக்கி விட்டன. இதையெல்லாம் கண்டு அம்பலத்தாடும் நடராஜப் பெருமான் வெகுண்டு எழுந்துவிட்டார். ருத்திர தாண்டவத்துக்காகக் காலைத் தூக்கி நின்றாடும் தெய்வம் தனது ஒரு காலை வேகத்தில் தூக்கியிருக்கிறது. தூக்கிய வேகத்தில் வலது கால் பாதுகை கழன்று கீழே விழுந்திருக்கிறது. பிரளயத்தை வருவிக்கும் ருத்ர தாண்டவம் ஆரம்பமாக இனி அதிக நேரம் இல்லை. உலகம் விரைவிலேயே அழிந்து ஒழியப் போகிறது. நெருங்கி வந்துவிட்ட இந்த ஆபத்திலிருந்து தப்பவேண்டும் என்றால் ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. மக்கள் அறவழியிலே நெறி தவறாமல் செல்ல முற்பட வேண்டும். இதை விட்டால் அவர்களுக்கு வேறு கதி கிடையாது!''

ஆனால் சாதாரணப்பொதுமக்களின் இந்தக் கற்பனைகள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களின் மனத்தைக் கவர்ந்துவிட வில்லை. அத்துறை வல்லுனர்கள் அதைப் பற்றி என்ன அபிப்பிராயப்படுகிறார்கள் என்பதை எதிர்பார்த்தார்கள்.



விச்வம்பர் காட்டன் மில்ஸ், விச்வம்பர் பாங்கு, 'விச்வம்பரி' பத்திரிகை ஆகியவற்றின் முதலாளியான விச்வம்பர் சக்கரவர்த்தி 'சகல கலா வல்லவர்' என்று ஒருமுகமாகப் பாராட்டப்படுபவர். அவர் எந்தக் கேள்விக்கும் 'எனக்குத் தெரியாது' என்று பதில் சொல்லி அறியாதவர். ஆனால் வானப் பாதுகையைப் பற்றிக் கேட்ட பொழுது, அவரே கம்பீரமாகத் தலையை மேலும் கீழும், இடது பக்கமும் வலது பக்கமும் அசைத்து விட்டார். இனி யாரைக் கேட்டு என்ன பிரமாதமாகத் தெரிந்து விடப் போகிறது?

வான சாஸ்திரப் பேராசிரியர்கள் சிலரிடம் சென்று கேட்ட பொழுது அவர்கள் பின்வருமாறு சொன்னார்கள் :

''அது என்னவென்று இப்பொழுதே தீர்மானமாக ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் அது கிரஹமோ கோளோ இல்லை என்பது மட்டும் சர்வ நிச்சயம். வானிலை ஆராய்ச்சிச் சாலையின் அறிக்கையை எதிர்பார்த்த பின்னரே ஒரு முடிவுக்கு வர இயலும்.''

அறிக்கை சீக்கிரமே வந்து விட்டது. பல உள்நாட்டு வெளிநாட்டு ஆராய்ச்சிச் சாலைகளிலிருந்து வந்த அறிக்கைகள் யாவும் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாக இருந்தன.

அறிக்கைகளின் சாராம்சம் இதுதான் :

''சூரியனுக்கு அருகில் உள்ள கிரஹம் புதன்: அதாவது மர்க்குரி. அதற்கு அடுத்தபடியாக இருப்பது சுக்கிரன்—அதாவது வீனஸ். அதற்கும் அடுத்தபடியாகத்தான் நமது பூமி வருகிறது. பூமிக்கு அடுத்ததாகச் செவ்வாய்—அதாவது மார்ஸ் என்று சொல்லலாம். கடைசியில் வெகு தொலைவில் இருக்கும் கிரஹம் வியாழன்—அதாவது ஜூபிடர். செவ்வாய்க்கும் வியாழனுக்கும் இடையேயுள்ள பாதையில் எத்தனையோ சிறு சிறு கிரஹங்கள் இருக்கின்றன. அவையும் சூரியனைச் சுற்றி வருகின்றன. இந்தக் கிரகங்களுள் ஒன்றுதான் வழி தவறிப் பூமிக்கு அருகில் வந்துவிட்டது. இந்த உபகிரஹம் வட்டவடிவமானதாக இல்லை. அதனால் பாரத நாட்டுச் சோதிடர்கள் இதை 'வானப் பாதுகை' என்று பெயர் இட்டு அழைக்கிறார்கள். மேல் நாட்டு அறிஞர்களும் இதே அர்த்தம் கொடுக்கக் கூடிய பெயர் ஒன்றுதான் வைத்து உபயோகித்து வருகிறார்கள். அவர்கள் இதை 'ஹெவன்லி ஸ்லிப்பர்' என்று அழைக்கிறார்கள். இந்த வானப் பாதுகைக்குச் சுபாவமாகவே சிறிது தன் ஒளி இருக்கிறது. சிறிது சூரிய கிரணங்கள் மூலம் கிடைக்கிறது. பூமிக்கும் இதற்கும் உள்ள இடைவெளி இப்பொழுது ஒன்றே முக்கால் கோடி மைல் இருக்கிறது. இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை என்ற கணக்கில் இது சூரியனைச் சுற்றி வருகிறது. இதன் உருவமும் கனமும் சந்திரனைக் காட்டிலும் ஐந்து மடங்கு அதிகம் என்று மதிப்பிடலாம். இது நெருங்கி வந்து விட்டதனால் செவ்வாய் சந்திரன் ஆகிய கிரஹங்களின் நிலை சற்றுக் கோணிப் போயிருக்கிறது. எனவே பூமியின் சுழற்சி நேரமும் சற்று மாற்றம் அடைந்திருக்கிறது. இப்பொழுது இது பூமியிலிருந்து இருக்கும் தூரத்தைக் கொண்டு பார்க்கப் போனோமானால், பயப்படுவதற்கான அறிகுறி ஒன்றும் தோன்ற வில்லை. ஆனால் கவலைக்கிடமான ஒரு விஷயம் என்னவென்றால், இது நாளுக்கு நாள் பூமியை நோக்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. இன்னும் நெருங்கி வந்து விட்டால், என்ன பயங்கரம் நிகழுமோ, சொல்வதற்கில்லை!''

விவரமான இந்த அறிக்கையைக் கண்ணுற்றதும் மக்கள் பீதியுற்று நடுநடுங்கிப் போய் விட்டனர். தடிமனான சரீரம் வாய்த்த எத்தனையோ தனவந்தர்கள் இருதயத் துடிப்பு நின்று விடவே மரணமெய்தி விட்டார்கள். பலர் வயிற்றுளைச்சல், தலைசுற்றல், இருதயத் துடிப்பு, மூச்சுத் திணறல் முதலிய நோய்களுக்கு இலக்காகி விட்டார்கள்.

ஒழிந்து தர்மத்துக்குத் தூணாக விளங்கும் அறிவில் சிறந்த ஞானிகளும் துறவிகளும், இஸ்லாம் மதத்துக்கு அஸ்திவாரமாகத் திகழும் முல்லாக்களும் மௌலானாக்களும், கிறிஸ்துவ தர்மத்தின் ரக்ஷகர்களாக விளங்கும் பாதிரிமார்களும் தங்கள் தங்கள் சாஸ்திரப் பிரகாரம் இதோபதேசம் செய்யலாயினர். இலக்கிய ஆசிரியர்கள், நாவல், கவிதை, கதை ஆகியவற்றை விட்டு விட்டுப் பரலோகத்தைப் பற்றியே பொரிந்து தள்ளலாயினர்.

பிறகு போகப் போகக் கொஞ்சம் கொஞ்சமாக நக்ஷத்திரச் செய்திகள் வெளிச்சத்துக்கு வர ஆரம்பித்தபொழுது, அதன் பொருட்டு இதுவரையில் கவலையே காட்டாமல் அசட்டையாக இருந்தவர்கள் கூடக் கிறக்கம் கொள்ள லாயினர்.



காரணம், அந்தத் துஷ்டத்தனம் வாய்ந்த கிரஹமான வானப் பாதுகை பூமியை நாளுக்கு நாள் வர வர நெருங்கி வந்து கொண்டிருந்ததுதான்.

கடைசியில் ஒருநாள் திடுக்கிடும் இந்தச்செய்தி தினத்தாள்களில் வெளியாகியது:

''ஐந்து மாதங்களுக்குள்ளேயே, இந்தக் கிரஹம் சந்திரனை மோதும். மோதிய வேகத்தில் இரண்டு கிரகங்களும் பூமியில் வந்து விழும். அதன் பலன் ஆயிரம் அணு குண்டு, ஹைட்ரஜ குண்டுகள் ஏக காலத்தில் வெடித்தால் என்ன ஏற்படுமோ, அதைக் காட்டிலும் பன்மடங்கு அதிகப் பயங்கரமாக இருக்கும். அது மோதுவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்பே வாயு மண்டலம் கலைந்து விடும். கடலில் கடும் புயல் வீசும். பிராணிகள் அனைத்தும் மூச்சுத் திணறி மரித்துவிடும்! இந்த நிலையிலிருந்து விடுபடுவதற்கு வழியே கிடையாது!''

கிறிஸ்துவ மதத்தின் பலதரப்பட்ட பிரமுகர்கள் ஒன்று கூடி ஒரு கூட்டு அறிக்கை வெளியிட்டனர்:

''நமது உயிரைக் காப்பாற்றிக் கொள்ளக் கூடிய நிலையில் நாம் இல்லாமல் இருந்த போதிலும், நாம் ஏதாவது செய்தே ஆக வேண்டும். அந்தரங்க சுத்தியுடன், நாம் செய்திருக்கும் பாபங்களைப் பலர் முன்னிலையில் ஒப்புக்கொள்ள வேண்டும். இடைவிடாத வழிபாடுகள் ஆண்டவனுக்கு நடத்த வேண்டும். ஆண்டவனிடம் அருள் பிச்சை கோர வேண்டும். விரோதிகளையெல்லாம் மன்னித்து அவர்களுக்கு உற்ற நண்பர்களாக ஆகவேண்டும். பிறர் துயரம் துடைத்தெறிய நம்மால் இயன்றதைச் செய்ய வேண்டும். கூண்டோடு கைலாசம் என்பதுபோல், எல்லோருக்கும் ஏக காலத்தில் மரணம் சம்பவிக்கிறதென்றால், அதற்குக் காரணம் ஆண்டவனின் கட்டளைதான். மானிடச் சாதியின் பாப மூட்டையின் பளுவைத் தாங்க முடியாமல்தான் ஆண்டவன் அப்படிப் பணித்திருக்க வேண்டும்!''

யூதம், இஸ்லாம், பௌத்தம் முதலிய மதங்களின் முக்கியஸ்தர்களும் இதே போன்ற உபதேசங்களைக் கூறி வந்தனர்.

ஆதிசங்கரரின் வழியிலே வந்தவர் என்று சொல்லிக் கொண்டும், அதில் தாம் ஒருவரே மிகுந்திருப்பதாகச் சொல்லிக் கொண்டும் இருந்த ஸ்ரீலஸ்ரீ 'வியோம சங்கர் மகாராஜ் ஹிந்தி மொழியில் ஒரு சிறு நூலை எழுதி ஐம்பது லட்சம் பிரதிகளுக்கு அதிகமாக விநியோகிக்கச் செய்திருந்தார்.

அந்நூலில் எழுதி யிருந்த விஷயத்தின் சாராம்சம் வருமாறு:—

''என் அருமைக் குழந்தைகளே! மரணத்துக்குப் பயந்து சாகாதீர்கள். எனக்கு வயது தொண்ணூறு ஆகிவிட்டது. நீங்கள் எல்லோரும் பிராயத்தில் என்னைவிடச் சிறியவர்கள். அதனால் என்ன பெரிய வேறுபாட்டையோ, மாறுபாட்டையோ நாம் கண்டு விட்டோம்? ஏனென்றால், பயமும் பீதியும் வேதனையும் வலியும் எல்லோருக்கும் ஒரே மாதிரிதான் வருகின்றன. குழந்தை-கிழவன் என்ற வித்தியாசத்தை இவ் விஷயத்தில் நாம் காண முடிவதில்லை. நமது ஆத்மா விரைவிலேயே இந்த உடற் சிறையிலிருந்து விடுபட்டுப் பரமாத்மாவுடன் இரண்டறக் கலக்கப் போகிறது. இது பரமானந்தப்படக்கூடிய விஷயம் அல்லவா? இதற்குப் பயந்து செத்தால் அது நன்றாயிருக்குமா? ஆனால் அபவித்திரமான அழுக்கேறிய நிலையில் இந்த உடலைத் தியாகம் செய்வது உசிதம் இல்லை. உங்களுக்கெல்லாம் ஒரு விஷயம் நன்றாகத் தெரியும். ஒரு பெரிய ஆபரேஷன் செய்வதென்றால் அதற்கு முன் நோயாளிகளைப் பட்டினியாகப் போடுகிறார்கள், பேதிக்குக் கொடுத்துக் குடலைச் சுத்தம் செய்கிறார்கள். உடல் உறுப்புகள் யாவும் சுத்தமாக இருக்கும் பொழுதே ஆப்பரேஷன் செய்கிறார்கள். இது ஏன்? உடலில் 'ஸெப்டிக்' ஆகிப் புரையோடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான். சிறிது சிந்தனையைச் செலவிட்டுப் பாருங்கள். குடல் அறுபத்தம் ஹர்னியா போன்ற வியாதிகளுக்கே இந்த நிலைமை என்றால் உயிர்த் தியாகத்தைப் பற்றிக் கூறவும் வேண்டுமா?

''சாதாரண நோய்களைப் போலவா உயிர்த் தியாகம் என்பது? எனவே, மரணத்துக்கு முன்னால், மனத்தில் எந்த விதமான கல்மிஷமும் இருக்கக்கூடாது. இருந்தால் ஆன்மா புரையோடிக் கெட்டுவிடும்; பாவச் சுமை நரகத்திலே கொண்டு தள்ளிவிடும். அதனால் நீங்கள் இதுகாறும் செய்திருக்கும் பாவச் செயல்களை எல்லாம் பல பேர்கள் அறியப் பிரகடனப்படுத்துங்கள். இவ்விதம் சாவதற்கு முன் ஆன்ம சுத்தி என்னும் மாபெரும் கடமையை நிறைவேற்றுங்கள். அப்படி முடியவில்லையென்றால், என்னைப்போல் நூல்கள் வெளியிட்டு அதில், உங்கள் பாவத்தின் விவரத்தை வரிசைப்படுத்தி வெளியிடுங்கள்.

''இந்த நூலின் கடைசியில், நான் செய்த— நான் செய்ததாக நினைவிருந்த முக்கியமான பாவங்களைத் தொகுத்துக்கொடுத்து நானே வழிகாட்டி யிருக்கிறேன்...''

அயல் நாடுகளில் ஆக்ஸ்போர்டு குழுவின் பெருமுயற்சியால், பெருவாரியான பெண்களும் ஆண்களும் தங்கள் தங்கள் தீச் செயல்களை ஒப்புக் கொண்டனர். மற்ற நாடுகளிலும் இந்தச் சுத்திகரிப்புக் கிளர்ச்சி வலுத்தது. பாரத மக்களிடையே வெட்கப்படும் சுபாவம் சற்று அதிகமாயிருந்ததால், மக்கள் முதலில் முன்வரவில்லை. ஸ்ரீலஸ்ரீ வியோம சங்கரரின் அறிக்கைக்குக்கூட அதற்கேற்ற பலன் கிட்டவில்லை.

ஆனால் பிரபல ஆராய்ச்சிச்சாலை ஒன்று வானப் பாதுகை மிகவும் நெருங்கி வந்து விட்டது என்றும் பூமியின் ஆகர்ஷண சக்தி அடங்கி விட்டது என்றும் அறிக்கை வெளியிட்டபொழுது, பாரத மக்கள் வெட்கத்தை மூட்டை கட்டி வைத்து விட்டுத் தங்களது பாவச் செயல்களைப் பலர் அறிய வெளியிடத் தொடங்கினார்கள். அசுர பலமுள்ள அச்சகங்களிலே வேலை குவிந்தது. சின்னஞ்சிறு அச்சகம் முதற்கொண்டு மாபெரும் அச்சகங்கள் வரை இரவு பகல் இருபத்திநாலு மணி நேரமும் இதே வேலையில் ஈடுபட்டன. அப்படியும் 'பச்சாத்தாபப் புஸ்தகம்' முடிக்கும் விஷயத்தில் அவை தோல்வியே கண்டன.

தேசமெங்கிலும் உள்ள மக்கள் தெருவிலே போவோர் வருவோர்களை வலுக்கட்டாயப் படுத்தி இழுத்து உட்கார வைத்துத் தங்கள் பாவக் கதையைக் கூறலாயினர்.



உலகில் உள்ள ரேடியோ ஸ்டேஷன்கள் அத்தனையும் அகண்ட பஜனையையும் பாவ மன்னிப்புப் பிரகடனத்தையும் தம் அரும் பணியாகக் கொண்டன.

மனிதர்கள் மட்டுமா தங்கள்செயலுக்காக வருந்தினார்கள்? தேசங்களே தங்கள் தீச்செயல்களை நினைந்து உருகின. நான்கு பெரும் வல்லரசுகளான, அமெரிக்கா, ரஷ்யா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகள் கடந்த ஐம்பது ஆண்டுகளில் தாங்கள் இழைத்த தீங்குகளை விவரித்து ஒரு கூட்டு வெள்ளை அறிக்கை வெளியிட்டன. "எல்லோரும் மனிதர்களே, ஒருவருக்கொருவர் சகோதரர்களே. யாரும் யாருக்கும் வேண்டாதவர்கள் அல்ல; தீங்கு இழைப்பவர்கள் அல்ல!" என்றும் பிரகடனப்படுத்தினார்கள்.

ஆனால் பாகிஸ்தானியர்களோ, 'என்ன தான் சகோதரர்களா யிருந்தாலும் எங்களுக்குக் காஷ்மீர் வேண்டும்' என்ற பல்லவியைப் பாடினார்கள்.

அப்பொழுதுதான் திடீரென்று ஒருநாள் மூன்று மூன்று அங்குலம் பருமனான எழுத்தில் பத்திரிகைகளில் ஒரு செய்தி பிரசுரமாயிற்று:

**துண்டக்கிரஹமும் திரும்புகிறது!**

இந்தத் தலைப்பின் கீழ் தரப்பட்டிருந்த விவரம் வருமாறு:

"வியாழன், சனி, யுரேனஸ், நெப்ட்யூன்-இந்த நான்கு பெரிய கிரகங்களும் சேர்ந்தாற்போல் ஒரு கோட்டுக்குள் வந்து விட்டதனால் 'வானப் பாதுகை' முன்னால் இழுக்கப் பட்டு விட்டது. இப்பொழுது அது தனது பழைய இடத்தில் இருக்கிறது! யார் செய்த புண்ணியமோ, பூமி பேராபத்திலிருந்து தப்பிப் பிழைத்து விட்டது!"

இச்செய்தி மக்களின் உயிருக்கு உயிர் ஊட்டியது. ஆனால் அடுத்த கணமே அவர்களது இருதயம் நடுக்கமுற்றது.

'இனி பிறருக்கு எப்படி முகத்தைக் காட்டுவது?' என்ற வேதனை வாட்டியது.

ஒவ்வொருவரும் ஒவ்வொருவர் எதிரேயும் தங்கள் தங்கள் உண்மை சொரூபத்தை உடைத்துக் காட்டி விட்டார்கள். எனவே, இம்மாதிரி கவலை ஏற்படுவது இயல்புதானே?

கள்ள மார்க்கெட்டு வியாபாரம் செய்பவர்கள், வருமான வரியை ஏமாற்றுபவர்கள், இதுபோன்ற எத்தனையோ குற்றங்கள் செய்பவர்களின் உயிர் வானப் பாதுகையின் பிடியில் சிக்கிய ஆபத்தைக் காட்டிலும் பெரும் ஆபத்தில் சிக்கி விட்டது. நான்கு வல்லரசுகளுமே கூடத் தங்கள் அவசர புத்தியை நினைந்து நினைந்து வருத்தப்பட்டன.

ஆனால் நல்ல வேளையாக, பகவான் செயலில் அவர்களது சங்கடங்கள் சீக்கிரமே தீர்ந்து விட்டன. உயர்நீதி மன்றத்து உயர் நீதிபதி அவர்கள் விட்ட மகத்துவம் வாய்ந்த அறிக்கைதான் அதற்கு முக்கிய காரணம்.

"போலீஸாரின் அடக்குமுறைக்குப்பயந்து கொடுக்கப்பட்ட வாக்குமூலங்கள் எப்படிச் செல்லுபடி ஆகாதோ, அப்படியே வானப்பாதுகையின் பீதிக்குப் பயந்து கொடுக்கப்பட்ட இந்த வாக்குமூலங்களுக்குச் சட்டப்படித் துளியும் மதிப்பு கிடையாது. முக்கியமாக யாருமே இது விஷயமாக ஸ்டாம்பு ஒட்டிய காகிதத்தில் எழுதிக் கையெழுத்திடாதது குறிப்பிடத் தக்கது!"

நான்கு வல்லரசுகளும், யூ. என். ஓ.வில் சேர்ந்த மற்ற சிறிய பெரிய ராஜ்யங்களும் கூடி, 'வானப் பாதுகை தோன்றி எங்கள் மனத்தை மாற்றி ஏதோ உளறச் செய்து விட்டதே ஒழிய வேறு ஒன்றும் இல்லை. எனவே அதை இப்பொழுது நாங்கள் மறுக்கிறோம். அதோடு பழைய நிலையை மீண்டும் அடைந்து விட்டோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்" என்று மீண்டும் ஒரு கூட்டறிக்கை வெளியிட்டன.

"ஒவ்வொருவரின் உள்ளமுமே அம்பலத்துக்கு வந்துவிட்டபின், யார் யாரைப் பார்த்துச் சிரிப்பது? ஊரே ஒருமிக்கச் சிரித்தால் கல்யாணம் அல்லவா?"

சாதாரண மக்கள் இப்படித் தங்கள் மனத்தைத் தேற்றிக் கொண்டார்கள். சாதாரண மக்களே இப்படித் தேற்றிக் கொண்டுவிட்ட பின் தேசங்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ?

திரும்பவும் 'பழைய குருடி கதவைத் திறடி' என்று உலகம் செயலாற்றத் தொடங்கியது. — நவநீதத்திலிருந்து ரா. வீ.




# கலிங்கா டியூப்ஸ்

தண்ணீர், காஸ், எஃகு, கலாய்
குழாய்கள் அரை அங்குலம்
முதல் இரண்டு அங்குலம் வரை

(B. S. S. 1387/1947 - Class A & B)

## கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்

**33, சித்தரஞ்சன் அவின்யூ, கல்கத்தா-12**

*(பாகடா: சௌத்வார், கட்டாக்)*



*கேரளம், சென்னை, பாண்டிச்சேரி, மைசூர், ஆந்திர ராஜ்யங்களுக்கு*
*பிரத்தியேக விநியோகஸ்தர்கள் :*

**சௌத் இந்தியா கார்ப்பரேஷன்**
**(ஏஜென்ஸீஸ்) பிரைவேட் லிட்.**
**2, அர்மீனியன் தெரு - சென்னை-1**

**எம். வி. சுந்தரராஜன் & கம்பெனி**
**290, லிங்கி செட்டித் தெரு**
**தபால் பெட்டி நெ. 182 - சென்னை-1**



*தென் பிராந்தியத்திற்கு ஸோல் ஏஜண்டுகள் :*

### டியூப் ஸப்ளையர்ஸ் லிமிடெட்

**2, அர்மீனியன் தெரு - - சென்னை-1**




### வருவாயை அதிகரிக்கச் செய்யுங்கள்

உங்கள் ஹைஸ்பீட் டீஸல், ஒரு ஓவர்ஹாலுக்கும், மற்றொன்றுக்குமிடையே இயங்கும் இடைக்காலத்தை அதிகரிப்பதன் மூலம், கால்டெக்ஸ் ஆர்.பி.எம். டெலோஸ் உங்கள் வருமானத்தை அதிகரிக்கும். டீஸல்களுக்கு ஏற்ற, புகழ் பெற்றதும், இணையற்ற சேவையளிப்பதுமான இந்த லூப்ரிகேடிங் ஆயில்கள், செலவை மிகவும் குறைக்கின்றன. எஞ்சினை நன்கு சுத்தீகரிப்பதன் மூலம், ஆர்.பி.எம். டெலோஸ் பராமரிப்புச் செலவுகளை 60 சதவிகிதம் வரை குறைக்கிறது. நாளடைவில், 30 சதவிகிதத்திலிருந்து 50 சதவிகிதம் வரை எண்ணெய் செலவுகளைக் குறைக்கிறது! மற்றும் ஸிலிண்டர் தேய்மானம் 85 சதவிகிதம் வரை குறைகிறது. (சராசரி 52 சதவிகிதம்) உங்களுடைய ஹை-ஸ்பீட் டீஸலுக்கு ஆர்.பி.எம். டெலோவின், இரட்டிப்பு பாதுகாப்பு மற்றும் எவ்வித உழைப்பையும் பெறுங்கள்.




உங்கள் நண்பரான கால்டெக்ஸ் டீலரை சந்தியுங்கள். அவர் உங்கள் விலையுயர்ந்த டீஸலுக்கு சிறந்த பாதுகாப்பு அளிப்பதோடு ஆர்.பி.எம். டெலோ டீஸல் எஞ்சின் லூப்ரிகேடிங் ஆயில் மற்றும் ஹை-ஸ்பீடால் டீஸல் ப்யூவல் வழங்கிய பின்னர்




AND

**HI-SPEEDOL**
DIESEL FUEL



அது எப்படி ஓடுகிறதென்பதைக் கவனியுங்கள்




பாடலிபுத்திரமே பௌர்ணமி நிலவில் அழகிய காட்சியை வழங்கியது. நகரெங்கும் அமைக்கப்பட்டிருந்த அழகு வாயில்களும் தோரணங்களும் அந் நகரின் எழிலை அதிகமாக்கிக்கொண்டிருந்தன. சிந்தனையை அள்ளும் விதத்தில் நகர் வெகு நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகர மாந்தரும் ரசனையோடு தத்தம் இல்லங்களை அழகு படுத்தியிருந்தனர். ஒவ்வொரு வீடும் ஆயிரக் கணக்கான அகல் விளக்குகளால் ஒளிமயமாகத் திகழ்ந்தது.

அன்று விசாக நட்சத்திரம்! புத்தர் பெருமான் தோன்றிய நன்னாள். புத்த விஹாரத்தில் நாள் முழுவதும் இடைவிடாமல் பூஜை நடந்து கொண்டிருந்தது. மக்கள் புத்த விஹாரத்தை நோக்கிக் கூட்டம் கூட்டமாகப் போவதும், வருவதுமாக இருந்தார்கள். புத்த விஹாரத்தின் வாசலில் அமைக்கப்பட்டிருந்த பெரிய மணி தன்னுடைய நீண்ட நாக்கினைப் பூவின் மலரிதழ் போன்று கவிந்திருந்த வெண்கலக் கன்னத்தில் மோத விட்டுப் பெருத்த ஒலியை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

இஃதொன்றையும் பொருட்படுத்தாமல் யமுனைக் கரையிலிருந்த மலர் வனத்தில் தனிமையில் அமர்ந்திருந்த அமரேந்திரன் காலாற எழுந்து நடந்தான். ஒரே இடத்தில் உட்கார்ந்திருந்ததால் அவன் கால் மடித்து விழுவது போல் கனத்தது! இடுப்பும் வலி கண்டது. வானத்தை நிமிர்ந்து பார்த்தான். பௌர்ணமி நிலவு தன் தளிர்க் கரத்தால் உலகத்தைத் தழுவிய வண்ணம் தன்னையே மறந்து ஊர்ந்து கொண்டிருந்தது. அமரேந்திரன் ஆழ்ந்த பெருமூச்சுவிட்டான்.

சங்கமித்திரையை இன்னும் காணவில்லை! காரணம்?...புத்தராலயத்தின் முதல் மணி அடிக்கும் பொழுது அங்கிருப்பேன் என்றவளை இன்னும் காணவில்லை. இரண்டாவது மணியும் அடித்து, காலம் மூன்றாவது மணியையும் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது. நிலவும் மேல்வானை நோக்கிச் சரிந்திருந்தது. இன்று பௌர்ணமி வீண்தானோ?...

குளிர்ந்த தென்றல் உடலைத் தொட்ட பொழுது உடலைச் சிலிர்த்துக்கொண்டான் அவன். புறவிதழ் அவிழ்த்து, பூவிதழ் விரித்து நின்ற

மலர்களின் சுகந்தம் அமரேந்திரனின் உள்ளத்தில் எண்ணச் சுவர்களை எழுப்பியது. அந்தச் சுவர்களிடையே அவன் தன்னைத் தலைவனாக்கிக் கொண்டான். தலைவி......சங்கமித்திரை தான். இதயத்திடையே அமர்ந்திருந்த அவளது எழிலுருவம் கண்வழி இறங்கி அவன் முன் வளைந்து நெளிந்தாடியது. அவன் கைநீட்டி அவளை எட்டிப் பிடிக்க முயன்றான். அவள் அகப்பட்டால்தானே !......

"அமர் !"

திடுக்கிட்டு அவன் ஏறிட்டுப் பார்த்தான். சங்கமித்திரை நின்றிருந்தாள். எவளை வெகு ஆவலுடன் அவன் எதிர்பார்த்தானோ அவள் அருகில் சிரித்துக் கொண்டிருந்தாள். அவன் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் ?" அவள் செம்பவள உதடுகள் கூடிப் பிரிந்த போது யாழ் கொஞ்சியது.

"இரண்டு நிலவுகள் எப்படி உலகத்தில் இருக்க முடியும் என்ற ஆச்சரியம் எனக்கு!" என்றான் அவன்.

"இரு நிலவா......?"

"ஆமாம் ! ஒன்று வானத்தில்.........மற்றொன்று என் அருகில் !"

அவள் கன்னம் நாணத்தால் சிவந்தது. அவனை ஏறிட்டுப் பார்த்த கண்கள் தாழ்ந்தன. அவள் கொவ்வைக் கனியிதழில் நாணப் புன்னகை நெளிந்தது ! கால்கள் தரையில் ஏதோ கோலமிட்டன. நிலமடந்தை நிச்சயம் அவள் எண்ணத்தைப் புரிந்து கொண்டிருப்பாள். ஏன் ? அவனுந்தான் புரிந்து கொண்டான்.

"ஏன் இவ்வளவு நேரம் ?" என்று கவிழ்ந்திருந்த அவள் முகத்தை நிமிர்த்தினான். நாணத்தின் வெளிறிய பூச்சு இன்னும் அவள் முகத்தில் அப்படியே படிந்திருந்தது.

"அப்பா பிடித்துக் கொண்டார் ! எவ்வளவு முயன்றும் அவரிடமிருந்து என்னால் விடுபட்டு வர முடியவில்லை."

"வழக்கம்போல் உபதேசமா ?"

"ஆமாம்!" என்றாள் அவள்.

"அசோக சக்கரவர்த்தி இளமையின் ஏக்கங்களை மறந்து விட்டிருக்கிறார். வயோதிக நெஞ்சம் வாலிப உள்ளத்தின் எண்ணச் சுழல்களை எண்ண மாட்டேன் என்கிறது. அலுத்துச் சலித்துப் போன வாழ்க்கையை யார்தான் நினைத்துப் பார்க்கத் தயாராக இருக்கிறார்கள்? அவர் வாழ்க்கையில் சலித்தவர். ஆகையால் வேறு வாழ்க்கையைப் பற்றி அவர் எண்ணிக் கொண்டிருக்கிறார். நீ எத்தகைய வாழ்க்கையை விரும்புகிறாய் ?"

"எனக்கென்று என்ன விருப்பம் இருக்கிறது, அமர்? உங்கள் விருப்பம்தான் என்னுடைய விருப்பமும் !"

"என் விருப்பமும் அசோக சக்கரவர்த்தி விரும்புவதைப் போல ஆசைகளைத் துறந்து, புத்த பிக்ஷுவாகப் போய்விடுவதுதான் !"

"என் விருப்பமும் அதுதான் !"

"உண்மையாகவா ?" என்று தன் கரத்தால் அவள் மலர் முகத்தை நிமிர்த்தி அவள் துறுதுறுக்கும் கண்களை இமைக்காமல் பார்த்தான். கருவிழிகளை நீள்விழியின் கடைபோக்கி அவள் எங்கோ பார்த்தாள். அவள் வாய்மட்டும் சொற்களை அளந்து உதிர்த்தது!

"நீங்கள் சொல்லியது மட்டும் உண்மையா ?" என்று கேட்டான்.

"சங்கமித்திரை !" அவன் உணர்ச்சிப் பெருக்கோடு அழைத்தான். அவள் நாணம் கலந்த புன்னகையை உதிர்த்துத் தலை கவிழ்ந்தாள். அவளுடைய இரு கரங்களையும் வாரி யெடுத்து நெஞ்சோடு இணைத்துக் கொண்டான் அவன். அந்தக் காதல் நாடகத்தை எட்டி நின்ற வண்ணம் பார்த்துக் கொண்டிருந்தார் அசோக சக்கரவர்த்தி. அவர் முகத்தில் ஆத்திரக் குறி எதுவுமே தோன்றவில்லை. வெகு அமைதியாக எதையோ யோசித்த வண்ணம் அங்கிருந்து நடந்தார்.



தா திகளோடு சங்கமித்திரை புத்த விஹாரத்துக்குப் போய்க் கொண்டிருக்கும் பொழுது அரண்மனை வசந்த மண்டபத்தில் அமர்ந்திருந்த சக்கரவர்த்தி அவளைக் கைதட்டி அழைத்தார். சங்கமித்திரை மான் போலத் துள்ளி ஓடி வந்தாள்.

''என்ன எதற்காக அப்பா அழைத்தீர்கள்?'' என்று வெகு ஆவலுடன் கேட்டாள்.

'' உன்னுடன் சேர்ந்து உலாவப் புறப்பட்டு எவ்வளவு நாட்கள் ஆகிவிட்டன! அதனால் தான் இன்று உன்னுடன் போகலாமென்று அழைத்தேன்'' என்றார் அவர்.

'' அப்படியானால் வாருங்கள், அப்பா, போவோம்!'' என்றாள் சங்கமித்திரை.



இருவரும் எழுந்து வசந்த மண்டபத்துக்கு அடுத்திருந்த நந்தவனத்தை நோக்கி நடந்தார்கள். வழி முழுவதும் அவர் எதுவுமே பேசவில்லை. சங்கமித்திரை மட்டும் மலர்ந்த தென்றலில் அசைந்தாடிக் கொண்டிருக்கும் மலர்களைப் பறித்துத் தலையில் சூடிய வண்ணம் வந்து கொண்டிருந்தாள். மலரைக் கண்டவுடன் அவள் மான் போல் துள்ளி ஓடுவதையும், மலரைப் பறித்துச் சூடிய பிறகு அன்னப் பேடை போல் அவள் அசைந்து வருவதையும் பார்க்கும் அவருக்குச் சொல்ல முடியாத ஏக்கம் பிறக்கும்! நாம் நினைத்திருக்கும் காரியத்துக்கு ஒரு வேளை அவள் பயன்படாமல் போய் விடுவாளோ என்ற பயம் கூட அவர் மனத்தில் அரும்பியது.

சலவைக் கல்லாலான பளிங்கு மேடையில் இருவரும் அமர்ந்தார்கள். உயர்ந்து வானளாவி நிற்கும் அசோக மரங்களிலிருந்து காய்ந்து உதிர்ந்த சருகுகளை மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார் அவர். எவ்வளவு நேரம்தான் தன் சுற்றிலுமுள்ள காட்சிகளை அவளே ரசித்துக் கொண்டிருக்க முடியும்?

''என்னப்பா! இப்படி மௌனமாகி விட்டீர்கள்? இளந் தென்றலும், மலர்வனமும் உங்கள் மனத்தைக் கவரவில்லையா? அதுதான் போகட்டும்!......தொடு வானத்திலிருந்து செந்நிறத்தை வானமெங்கும் இறைத்திருக்கும் அந்திவானம்கூட உங்கள் நினைவைத் தொடவில்லையா? பின் எதற்கு என்னை நந்த வனத்துக்கு அழைத்து வந்து விட்டு இப்படி மௌனமாக உட்கார்ந்திருக்கிறீர்கள்?'' என்று பொறுமையிழந்த குரலில் கேட்டாள் சங்கமித்திரை.

அவளும் எவ்வளவு நேரம் பொறுத்துப் பார்ப்பாள்? கடந்த ஒரு நாழிகை நேரமாகவே அவர் பெரிய யோசனையில் ஆழ்ந்து விட்டிருந்தார். அவள் குரலில் ஒலித்த சூட்டை உணர்ந்து அவர் திரும்பிப் பார்த்தார். அவள் முகத்தை 'உர்'ரென்று வைத்துக் கொண்டிருந்தாள்.

''அதில்லை, சங்கமித்திரை! இந்தப் புது மலர், உன் தலை நிறைந்திருப்பது நாளைக்காலையில் என்னவாகும்?'' என்று கேட்டு விட்டு அவர் மறுபடியும் யோசனையில் ஆழ்ந்தார்.

''ஏன்? வாடிவிடும்!......''

''இந்த அந்தி வானம் இன்னும் சற்று நேரத்தில்......?''

''இருண்டு விடும்!'' என்றாள் அவள்.

''வானமெங்கும் தன் செந்நிறத்தால் அழகிய காட்சி வழங்கிய அந்தி வானத்தின் அழகும்......?''

''அதிலென்ன சந்தேகம்?மறைந்துவிடும்!''

அவர் ஆழ்ந்த பெருமூச்சு விட்டார்! வாடி உலர்ந்து தரையில் உதிர்ந்து கிடக்கும் குண்டு மல்லிகையொன்றைக் கையில் எடுத்தார்.

''நேற்று எவ்வளவு கர்வத்துடன் செடியில் பூத்து நின்றிருக்கும்? தனக்கு மட்டும் சத்தும் கொடுத்த பூமியையே பார்க்க நாணிக் கர்வத்துடன் ஆகாயத்தை நோக்கி நிமிர்ந்த வண்ணம் இருந்திருக்கும்! ஆனால் இன்று...?''

''இன்று என்னப்பா உங்களுடைய பேச்சும், செய்கையும் எனக்குப் பிடிபடவில்லையே! வர வர அசோக சக்கரவர்த்தியின் கருணை வாடி வளர்ந்த முல்லையிடமும் போக ஆரம்பித்து விட்டதா? அதற்கும் ஏதாவது உபதேசம் வைத்திருக்கிறீர்களா? அதோ பாருங்கள்......தென்றலில் அசைந்தாடிய வண்ணம் மணம் பரவப் பூத்திருக்கும் புத்தம் புது முல்லையை!'' என்று சுட்டிக் காட்டினாள்.

''நேற்று இதன் வாழ்வும் அப்படித்தானே இருந்திருக்கும்? இன்று இதன் வாழ்வைப் பார்! சிந்துவாரின்றிக் கிடக்கிறது. நேற்று ஆவலுடன் தலையில் சூடியவர்கள் அதை இன்று வெறுப்புடன் தூக்கி எறிகிறார்கள். நேற்று கூந்தல் மணக்கத் தலையிலிருந்தது இன்று வருவோர் போவோர் காலில் மிதிபடுவதற்குப் பூமிக்கு வந்து விட்டது. இவையெல்லாம் நமக்கு எதையோ நினைவூட்டுகின்றன. இல்லையா?'' என்றார் மன்னர்.

பாட்டி : டாக்டர் சார்! இந்த வலது காலை நீட்டவும் முடியவில்லை, மடக்கவும் முடியவில்லை!



டாக்டர்: வயது ஆகி விட்டதோ இல்லையோ அதனால் தான்!

பாட்டி : அப்போ இந்த இடது காலுக்கும் அதே வயசுதானே ஆகிறது. அதுக்கு மட்டும் ஒன்றுமில்லையே!

''இவை யெல்லாம் நமக்கு எதை நினைவூட்டுகின்றன?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டாள் சங்கமித்திரை.

''வாழ்க்கை அநித்தியம் என்பதைத் தான்!'' என்றார் அவர் பெருமூச்சுடன்.

''என்னப்பா சொல்லுகிறீர்கள்?''

''வாழ்க்கை நிலையற்றதம்மா! உன்னிடம் காணும் இளமையும், அழகும் ஒரு நாள் அழிந்து விடும். இப்பொழுது உன்னைக் கண்டு மோகிப்பவர்களெல்லாம் அப்பொழுது வெறுத்து ஒதுக்குவார்கள். இந்த உதிர்ந்து கூம்பிய மலரின் நிலைதான் உனக்கும் அப்பொழுது! இருண்ட வானத்தை யாராவது ரசித்துப் பார்த்திருக்கிறாயா?......'' அவள் நெஞ்சம் துணுக்குற்றது! அவர் மேலும் சொல்லிக்கொண்டே போனார்.

''இளம் வாலிபர்களுடைய காதல் இதயத்திலிருந்து பிறக்காமல் கண்ணிலிருந்து பிறக்கிறதாம். கண்ணிலிருந்து பிறக்கும் காதல் கவர்ச்சியை அடிப்படையாகக் கொண்டதுதானே? உன் உடல் கவர்ச்சியும் இளமையும் அழியும்பொழுது உன்னிடம் காதல் கொண்ட வாலிபனின் மனம் மாறுவது இயற்கைதானே?'' என்றார் மன்னர்.

அவள் மனம் குழம்பியது! 'சக்கரவர்த்தி தன்னிடம் இதையெல்லாம் பேச வேண்டிய தன் காரணம்? ஒருவேளை என் காதல் அவருக்குத் தெரிந்திருக்குமோ? அப்படித் தெரிந்திருந்தால் மிகவும் நல்லதாயிற்று......' என்று எண்ணினாள் அவள்.

''அப்பா! நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்களோ, அதைத் தெளிவாகச் சொல்லி விடுங்கள். இப்படி எதற்காக மறைமுகமாகப் பேச வேண்டும்?'' என்றாள் அவள் சற்றுப் படபடப்புடன்.

''நீ புத்திசாலிப் பெண்ணென்று நான் நினைத்தேன். ஆனால் நான் சொல்லும் நுட்பமான விஷயத்தை நீ புரிந்து கொள்ளவில்லை! நாம் நம்முடைய வாழ்க்கையைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருக்கக் கூடாது. புத்தர்பிரான் தமது வாழ்க்கையைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தாரானால் புத்த மதமே தோன்றியிருக்காது. அவர் அருள் நெஞ்சம் மக்களின் துன்பத்தைக் கண்டு இரங்கியது. ஆசையே துன்பங்களுக்குக் காரணம் என்று கண்டார். அந்த அருள் நெறியை உலகமெங்கும் பரப்புவது நம் கடமையல்லவா?'' என்று நிறுத்தினார் அவர்.

''அப்பா! எனக்கு இப்பொழுது எல்லாம் புரிந்தது! உங்கள் அலங்கோலத்தின் காரணத்தையும் நான் தெரிந்து கொண்டேன். அமரேந்திரனின் காதலை உதறிவிட்டு ஈழத்துக்குப் புத்தமதத்தைப் பரப்ப நான் போக வேண்டும். அதுதானே உங்கள் கோரிக்கை?''

''ஆமாம்!'' என்றார் அவர் அமைதியாக.

''அது ஒரு நாளும் நடக்கப் போவதில்லை!'' என்றாள் அவள் அழுத்தம் திருத்தமாக.

''இந்தப் பதில் நான் எதிர்பார்த்தது தான்! உன் உள்ளத்தில் வேர் விட்டிருக்கும் காதலை நான் அறியாதவனல்ல. ஆனால்...!'' என்று நிறுத்தினார் அவர் புன்னகையுடன்.

''என்னப்பா! ஆனால்...?''

''உன் இளமையும், அழகும் அழிந்து நீ கருகிய மலராக நிற்கும்பொழுது அமரேந்திரனுல்கூட உன் காதலை ரசிக்க முடியாது! அவன் கூட உன்னை மணப்பதற்கு விரும்ப மாட்டான்!'' என்று கூறிவிட்டு அவர் மேடையிலிருந்து எழுந்தார்.

அவர் எழுந்துபோவதைக் கூடக் கவனிக்காமல் அவள் உட்கார்ந்திருந்தாள். அதைக் கவனிக்காதவர் போன்றே அசோக சக்கரவர்த்தி எழுந்து நடந்தார். அவள் கற்சிலையாக அமர்ந்திருந்தாள்! அவள் உணர்வு முழுவதும் ஒரே நினைவிலேயே சுற்றிச் சுற்றிச் சுழன்றது.

**வ**சந்த காலத்தின் அறிகுறியாக மரங்களையாவும் இலையுதிர்ந்து நின்றன. நீர்ப் பெருக்கத்தால் நதியோரங்களில் படிந்திருக்கும் வண்டல் மண்ணின் செந்நிறத்தைப் போன்று விருட்சங்களின் உயிர் கணுக்கள்தோறும் கருஞ்சிவப்போடு கூடிய தளிர்கள் அரும்பியிருந்தன. மாரிக் காலத்தில் பெருக்கெடுத்து ஓடிய யமுனையும் தன் சீற்றம் தணிந்து அமைதியாகப் போய்க் கொண்டிருந்தது.

சங்கமித்திரை அந்தக் காட்சியை இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அக்காட்சியின் கோரம் அவள் நினைவைக் குழம்பச் செய்தது. அமைதியான நதியின் போக்கில் பெரும் சுழிப்பு ஏற்படுவதைப் போல அவள் நினைவிலும் கலக்கம் ஏற்பட்டது. இரண்டு மூன்று நாட்களாகவே அவள் ஓயாத சிந்தனையில் ஈடுபட்டிருந்தாள்.

இருண்ட வானத்தை ரசிப்பவர்கள்யாருமே இல்லையா? வானம் ஒளி ஜாலங்களைச் செய்யும்போதுதான் மனிதர்கள் அதன் அழகில் ஈடுபடுகிறார்களா? தன் அழகிய நீலநிறப் போர்வையில் எண்ணிறந்த விண்மீன்களை வாரி இறைத்து, இரத்தினங்களில் சிறந்து ஒளி வீசும் மாணிக்கத்தைப் போன்ற நிலவைத் தன்னகத்தே கொண்டு விளங்குவதால் தான் மனிதர்கள் அதன் அழகில் சொக்கி நினைவைப் பறி கொடுக்கிறார்களா? மேகங்கள் சூழ்ந்த இருண்ட இரவைப் பற்றிப் புகழ்ந்து கூறுபவர்கள் யாருமே கிடையாதா? அப்படியானால் ... அப்படியானால் ... அவள் அறிவு மறுபடியும் குழம்பியது.

